# நல்வழியும்

## கதைக் குறிப்பும்

இது

வாழ்குடை, வேங்கடராம சாஸ்திரிகள்

எழுதியது.

---

ஆர். கணபதி அண்டு கம்பெனி

பெரமபூர், சென்னை.

---

1918

காபிரைட்

# முகவுரை.

நலவழி என்பதற்கு நல்ல நீதிமார்க்கங்களைக் கற்பிக்கும் நூலென்று பொருள். இதனை ஔவையென்ற தமிழ்ப் பண்டிதை இயற்றினள். சிலர் ஔவை யென்னும் பெயரோடு இருவர் இருந்திருக்கவேண்டுமென்று அபிப்பிராயப் படுகின்றனர். இன்னுஞ் சிலர் அதிகமான் கொடுத்த அமிருதமயமான நெல்லிக்கனியை உண்டதனால் ஒரே ஔவையே நெடுங்காலம் வரையில் ஜீவித்திருந்தாளென்று எண்ணுகின்றனர். அவ்வையம் எங்ஙனமாயினுமாக.

ஔவை பகவனென்ற அந்தணனுக்கும் ஆதியென்பவளுக்கும் பிறந்தவள்; கபிலர், திருவள்ளுவர் முதலான நல்லிசைப் புலவர்களின் சகோதரி; சைவசமயத்தவள்; தமிழ்நாட்டு மூவேந்தரையும் சிற்சில பிரபுக்களையும் பாடிப் பரிசில் பெற்றவள்; இவள் சரித்திரத்தினால் ஏழைகளிடத்தில் அதிக இரக்கமுள்ளவளென்பது தெரியவருகிறது. இவள் இயற்றின வேறு நூல்கள் வேழமுகம், விநாயகரகவல், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, அசதிக்கோவை முதலியன.

பிரதமபாடசாலை (ப்ரைமெரி ஸ்கூல) மாணவர்களின் உபயோகத்திற்காக உலகநீதி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை என்ற நான்கு புத்தகங்களுக்கும் உரையும் கதைக்குறிப்பும் ஏற்கெனவே எழுதுவித்து வெளிப்படுத்தியிருக்கிறோம். இது நலவழியும் கதைக்குறிப்பும் சேர்ந்தது. பிள்ளைகளுக்கு நீதி மத சம்பந்தங்களான சரித்திரங்களைக் கற்பிப்பதற்கு இவைபோன்ற சிறு நூல்கள் இன்றியமையாதன. சில ஆசிரியர் உரையினும் அரும்பதவுரையே மிக நன்றென்றமையால், இதில் அரும் பதங்களுக்கு மாத்திரம் உரை எழுதியிருக்கிறோம். இதுபோலவே மூதுரைக்கும் விரைவில் வெளிவரும்.

பெரம்பூர்<br>சென்னை } ஆர். கணபதி அண்டு கம்பெனி.

# நல்வழியும்

## கதைக் குறிப்பும்

---

### கடவுள் துதி.

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா.

அரும்பத உரை:—கோலம்-அழகு. துங்கம்-பெருமை. தூ-பரிசுத்தம். சங்கம்-மதுரையிலிருந்த தமிழ்ச்சங்கம். முத்தமிழ்-இயல் இசை நாடகம். தா-கொடு.

### நூல்.

1. கதை:—முன்னொருகாலத்தில் பாகீரதி யாற்றங் கரையில் ஒரு கிராமம் இருந்தது. அதில் ஒரு பெரிய பிரபு இருந்தார். அவருக்கு நெடுங்காலம் வரையில் புத்திரன் பிறக்கவில்லை. அவர் மனைவி தனக்குப் புத்திரன்பிறந்தால் காட்டில் வனதேவதைக்கு அன்னம் படைப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டாள். அவள்பெயர் சுஜாதை. அந்த வருஷத்திலேயே அவளுக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அவள் பின்னொருநாள் குழந்தையை யெடுத்துக் கொண்டு வனதேவதைக்கு அன்னம் படைப்பதற்குத் தோழியோடு போனாள்.

அப்போது காட்டில் ஓர் அரசமரத்தடியில் கவுதம புத்தரென்பவர் பசியோடு உட்கார்ந்திருந்தார். சுஜாதையும்

தோழியும் அவரை உண்மையான வனதேவதையென்று நினைத்துத் தாங்கள் கொண்டுபோயிருந்த அன்னத்தையும் பலகாரங்களையும் அவருக்குப் படைத்தார்கள். புத்தர் அவற்றை நன்றாகவுண்டு பசியாறிக் களைதெளிந்து "அம்மா! நான் வனதேவன் அல்லன்; சாதாரணமான ஓர் எளிய மனிதன். நல்லவழியைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று சிலவருஷங்களாக இப்படிக் காட்டில் அலைந்து திரிந்துவருகிறேன். உங்களுக்கு ஏதேனும் தெரிந்திருந்தால் சொல்லுங்கள்." என்று சொன்னார்.

சுஜாதை "ஐயா! நான் பெண்பால். எனக்கு அதிகமாகத் தெரிந்திருக்கமுடியாது. ஏனென்றால், நான் புருஷர்களைப்போலப் பலதுறைகளையும் கற்பிக்கின்ற சாஸ்திரங்களைப் படிக்கவில்லை. அன்றி அவற்றைத் தெரிந்துகொண்டிருக்கும் பெரியவர்களோடும் நெருங்கிப் பழகவில்லை. எனக்குத் தெரிந்தது ஒன்றே ஒன்றுதான் இருக்கும். அதுவும் என்னுடைய ஒழுக்கமேயன்றி வேறன்று. 'நன்மை விதைத்தால் நன்மை விளையும்; தீமை விதைத்தால் தீமை விளையும்.' மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் இதுவரையில் நான் நன்மைகளையே செய்துவந்திருக்கிறேன். அந்நன்மைப்பயிர் எனக்கு இப்போதே விளைந்து பலன் தராவிட்டாலும் மற்றொரு பிறப்புக்காவது நிச்சயமாகப் பலன் தரும். என் குழந்தையை நான் பார்ப்பதுபோலவே எல்லாவுயிர்களையும் அன்போடு பார்த்துவருகிறேன். இந்தக் காரணத்தினால் கடவுள் பார்வையும் என்மீது அன்புள்ளதாகவே யிருக்குமென்பது நிச்சயம். இங்கே எனக்குக் கிடைக்கும் சுகதுக்கங்கள் யாவும் கடவுளால் அனுப்பப்பட்ட என் வினைப்பயன்கள்தாம். அதனால், மரணத்துக்கும் நான் பயப்படவில்லை. எது நடந்தாலும் எனக்குச் சந்தோஷமேயாம். நான்

உலகத்திலிருக்கும் வரையில் பிறருக்குத் தீமைகளைச் செய்யாமல் நன்மைகளையே செய்யவிரும்புகிறேன். இவ்வொன்றுதான் நான் விரும்புவது. இக்கோட்பாடுகளைத் தங்கள் போன்றவர்கள் எப்படி அங்கீகரிப்பார்களோ' என்று கூறினள்.

கவுதமபுத்தர் "அம்மா! சுகத்தைக் கண்டறியும் மார்க்கம் தங்களுக்குச் சொந்தமாகிவிட்டது. மனச் சமாதானம் எவற்றிலும் உயர்ந்தது. இதுதான் சாஸ்திரங்களின் சம்மதம். நங்களையும் தங்கள அன்புள்ள குழந்தையையும் கடவுள் எப்போதும் காப்பாற்றுவார்" என்று விடையளித்து அநுக்கிரகம் பண்ணிப் போனர். ஆதலால், பாவத்தை யொழித்துப் புண்ணியம் செய்வதுதான் சாஸ்திரங்களின் சம்மதமென்று இதனல் வெளியாகின்றதல்லவா?

புண்ணியமாம் பாவம்போம் போனநாள் செய்தவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்,

புண்ணியம் ஆம்—புண்ணியத்தால் எல்லா நன்மைகளும் ஆகும். பாவம் போம்—பாவத்தால் நன்மை யெல்லாம் போகும். தீது ஒழிய-துன்பம் நீங்க.

---

2. கதை:—சில காலத்துக்கு முன்பு நம் தென்னிந்தியாவில் குமணன் என்று ஒரு சிற்றரசன் இருந்தான். அவன் நாளதோறும் யாசகர் விரும்பினவற்றை விருப்பத்தோடு கொடுத்துவந்தான். அவன் சகோதரன் பெயர் இளங் குமணன். அவன் பிறருக்கு உதவி செய்வதில் கொஞ்சமும் எண்ணமில்லாதவன். அவன் தன் மூத்த சகோதரன் யாசகர்களுக்கு எல்லாவற்றையும் கொடுத்

துப் பொக்கிஷங்களை வரட்டிவிடுகிருன் என்று மந்திரி முதலானவர்களிடத்தில் எப்போதும் சொலலிக் கொண் டேயிருப்பான். அவன் ஒரு நாள சில நண்பர்களின் தூர்ப் போதனையின்மீது இராஜ சபைக்குச் சென்று குமணனை வணங்கி 'அண்ணு! தாங்கள் இதுவரையில் யாசகர் விரும் பியவற்றைக் கொடுத்து அவர்கள மனத்தைச் சந்தோஷிப் பித்து வந்திருக்கிறீர்கள. நான் தங்கள சகோதரன். நான் இராஜ்ய பரிபாலனம் செயவதற்கு நெடுங்காலமாக ஆசை கொண்டிருக்கிறேன். அவ்விருப்பத்தைத் தாங்கள நிறை வேற்றி வைக்கவேண்டும்' என்று சொன்னுன்.

குமணன் உடனே சிங்காசனத்தை விட்டுக் கீழே இறங்கிவந்து அவனைக் கட்டிக்கொண்டு 'இளங் குமணு! நீ இன்று முதல் இந்த நாட்டுக்கு அரசனுக இருந்துவா! எனக் குச் சொநதமான எலலாவற்றையும நான் இச்சபையார் அறிய இப்போது உனக்குக் கொடுததுவிட்டேன்' என்று சொலலி அப்போதே வனத்துக்குச் சென்று விட்டான். இளங் குமணன் உடனே இராஜ்யத்தைச் சொந்தமாக்கிக் கொண்டு கெட்ட எண்ணததிஞல் தமையன் தலையைக் கொண்டு வருகின்றவர்களுக்கு ஐந்நூறு வராகன் இனும் கொடுக்கப்படும் என்று பறைசாற்றுவிததான். சிலநாளக ளுக்குப் பிற்பாடு, பெருஞ்சித்திரனு ரென்ற ஒரு தமிழ்ப்புல வர் காட்டிலிருந்த குமணவள்ளலேக்கண்டு 'அரசரே! நான் ஒரு தமிழ்ப்புலவன். இரண்டு நாட்களாகத் தங்களைத்தேடி இந் தக்காட்டில் அலைந்து திரிந்து வருகிறேன். எனக்கு ஏதாவது வெகுமதி கொடுக்கவேண்டும்' என்று ஒரு பாட்டுப் பாடினர். குமணவளளல் கொடுபபதற்கு ஒன்றுமில்லாமையினுல் 'புலவரே! என் தலையை எடுத்துக்கொண்டுபோய் என் தம்பி யின் கையில் கொடுதது அதன் விலையாகிய ஐந்நூறு வராக னைப் பெற்றுச் செல்லும்' என்று சொல்லி அவரிடம்

வாளைக்கொடுத்துத் தலை குனிந்து நின்றான். ஆதலால், உயர்ந்த சாதியென்பது குமணவள்ளலைப்போலப் பிறருக்கு ஒன்றைக் கொடுத்தலினால் உண்டாகுமேயல்லாமல் பிறந்த குலத்தினால் மாத்திரம் உண்டாகமாட்டாது.

> சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
> நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
> இட்டார் உயர்ந்தோர் இடாதார் இழிகுலத்தோர்
> பட்டாங்கி லுள்ளபடி

சாற்றுங்கால்-சொல்லு மிடத்து. நெறிமுறை-வழியின் ஒழுங்கு. மேதினி-பூமி. பட்டாங்கு-உண்மைநூல்.

---

3. கதை:—வெகுகாலத்துக்கு முன்பு சந்திரகுலத்தில் ரந்திதேவரென்று ஓரரசர் இருந்தார். அவர் உடல் நிலையற்றது; தருமம் நிலைபெற்றது என்று தெரிந்துகொண்டு தம்மை விரும்பிவந்த யாசகர்களுக்கு இல்லையென்னாமல் எல்லாவற்றையும் விருப்பத்தோடு கொடுத்துவிட்டுத் தாம் காட்டுக்குச் சென்று வசித்துவரத்தொடங்கினார். அங்கு நாற்பத்தெட்டு நாட்கள வரையில் பட்டினி கிடந்து நடத்தவேண்டிய ஒரு பெரிய விரதத்தை அவர் பக்தியோடு முடித்துவிட்டுப் பாரணை பண்ணப் போனார். அப்பொழுது ஒரு பிச்சைக்காரன் தள்ளாடித் தள்ளாடி வந்து 'ஐயா! நான் மிகவும் பசியோடிருக்கிறேன்; ஏதாவது கொஞ்சம் உணவு தாருங்கள்! உங்களுக்குப் புண்ணியமுண்டாகும்' என்று கெஞ்சிக் கேட்டான். அவர் அவனுக்குத் தமது உணவில் பாதியைக் கொடுத்து 'உண்டுபோ' என்று சொன்னார். பின்பு மற்றொருவனும் அப்படியே வந்து பசியென்று சொல்லி யாசித்தான். அவனுக்கு இருந்தவற்றில் பாதியைக் கொடுத்

துச் 'சாப்பிட்டுப்போ' என்று அனுப்பினார். பிற்பாடு இளைத்த நாயொன்று பசியால் வருந்திவந்து வாலைக் குழைத்து நின்றது. அவர் பிச்சத்தை அதற்கு வைத்துவிட்டுத் தாம் சந்தோஷமாகத் தண்ணீரைப் பருகினார். அப்போது கடவுள் வந்து அவர் கருணையை மகிழ்ந்து புகழ்ந்து, அவர் விரும்பிய வரங்களைக் கொடுத்து மறைந்தார். அவரைப்போல இல்லையென்னாமல் அன்போடு கொடுப்பவர்களுக்குக் கடவுள் அருள் தானே யுண்டாகும்.

இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே—இடுங்கடுக
உண்டாயி னுண்டாகு மூழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

இடும்பை-துன்பம். இடும்பை-அமைந்திருக்கும் பையாகும். கடுக-சீக்கிரமாக. நோய்-பிறவிநோய். விண்டாரை-நீங்கின ஞானிகளை. வீடு-முத்தியுலகம்.

---

4. **கதை:**—ஆதிகாலத்திலே சூரியவம்சத்தில் சகரனென்று ஒரு மன்னவன் இருந்தான். அவனுக்குச் சாகரர் என்று அறுபதினாயிரம் புத்திரர் பிறந்தார்கள். அவர்கள் தங்கள் தந்தையின் யாகக்குதிரையைக் கண்டுபிடிக்கும்நிமித்தம் பாதாளத்துக்குப்போய் அங்குத் தவம்செய்துவந்த கபில மகா முனிவருடைய தவத்தீயினால் அனைவரும் சாம்பலாய் விட்டார்கள். சகர மன்னவன் தன் புத்திரர்களுக்கு நற்கதியை உண்டுபண்ணும்பொருட்டுச் சுவர்க்க லோகத்திலிருந்த கங்காநதியைப் பாதாளத்துக்குக் கொண்டுவரப் பலவாறு பிரயத்தனம் பண்ணினான். எவ்வளவு செய்தும் அவனால் அக்காரியம் முடியவேயில்லை. இரண்டாவது அவன்புத்திரன் அம்சுமந்தனென்பவன் தந்தையைப்போலத் தானும்

முயற்சிசெய்து காரியசித்தி பெறாமலேயே இறந்துபோனான். மூன்றாவது அவன் புத்திரனாகிய திலீபன் கங்கையைக்கொண்டுவருவதற்கு இரவும் பகலும் ஓயாமல் உழைத்துவந்தான். அந்தப் பெருங்காரியம் அவனாலும் முடியாமற் போயிற்று.

அப்புறம் திலீபனுக்குப் புத்திரன் தோன்றினான். அவன் பெயர் பகீரதன். அந்த மன்னவன் தன் இராஜ்யத்தை மந்திரிகளிடத்தில் ஒப்புவித்துவிட்டுப் பனிமலையோரத்தில் பிரமதேவனை நினைந்து பெருந்தவம் புரியத்தொடங்கினான். அப்போது அந்தக் கடவுள் வந்து 'அரசனே! கங்கையின் வேகத்தைச் சிவபெருமானை யல்லாமல் வேறொருவரும் தாங்கமாட்டார்கள். ஆதலால், முதலில் கங்கையையும் பின்பு சிவபெருமானையும் உன் தவத்தினால் சந்தோஷப்படுத்து. காரியம் அநுகூலமாகும்' என்று சொல்லிப் போனார். பிற்பாடு பகீரதன் கங்கையை நினைந்து நெடுங்காலம் வரையில் தவம்பண்ணினான். அப்புறம் கங்கை எதிரில் வந்து 'அரசனே! உன் தவத்தினால் மிகவும் சந்தோஷமடைந்தேன். நான் பூமியிற் பாய்ந்தால் பூமி பிளவுண்டு எண்ணிறந்த ஜீவர்கள் நாசமடைந்துபோகும். அங்ஙனம் ஆகாமலிருப்பதற்கு என் வேகத்தை ஒருவர் முன்னின்று தடுக்கவேண்டும். அதற்குச் சிவபெருமான் ஒருவர் தாம் சக்தியுள்ளவர். ஆதலால், அவரை முதலில் ஒப்புக்கொள்ளும்படி செய்!' என்று சொல்லிப்போனாள்.

பின்னர், அம்முயற்சியுள்ள அரசன் சிவபெருமானைக் குறித்துத் தவம்செய்யத்தொடங்கினான். சில வருஷங்களுக்குப் பின்பு அந்தக் கடவுள் வந்து 'தருமபுத்தியுள்ளவனே! உன் விருப்பத்துக்குச் சந்தோஷிக்கிறேன். சீக்கிரம் கங்கையை வரப்பண்ணு' என்று சொன்னார். பகீரதன் கங்கை

யைப் பிரார்த்தித்த மாத்திரத்தில் கங்கை மிகுந்த வேகத்தோடு நிலத்தில் இறங்கினாள். சிவபெருமான் தம் சாமர்த்தியத்தினால் அக்கங்கையைத் தம் சடைமுடியில் அடக்கி அதன் வேகத்தைக் குறைத்து வேண்டிய அளவு நிலத்தில் விட்டார். பகீரதன் அந்தக் கங்கையாற்றைப் பாதாளத்துக்குக் கொண்டுசென்று இறந்துபோன தன் பாட்டன்மார்களின் எலும்புக் குவியலில் படியப்பண்ணிப் பிதிர்களுக்குப் புண்ணியலோகத்தை உண்டாக்கினான். அன்று முதல் கங்கையாறு அவன் பிரயத்தனத்தினால்தான் வடஇந்தியாவில் பெருகிவருகின்றது. ஆகையால் பிரயத்தனப்படுகின்றவர்களுக்கெல்லாம் எடுத்த காரியம் நிறைவேறி விட மாட்டாது. ஆகுங்காலம் வந்தால்தான் ஒவ்வொன்றும் நிறைவேறும்.

எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்தும் போதல்லால்—கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு.

மாத்திரைக் கோல்-அளவு கோல். ஆம்-ஆகும்.

---

5. கதை:—அரபி தேசத்தில் அபுநாஷர் என்று ஒரு வர்த்தகச்சிறுவன் இருந்தான். அவனுடைய பதினெட்டாவது வயதில் தகப்பன் இறந்துபோனான். கணக்குப் பார்க்கும் போது எல்லாம் போக அவனுக்கு ஐம்பது ரூபாய்தான் ஆஸ்தியிருந்தது. அபுநாஷர் அப்பணத்தை முதலாகவைத்துக் கொண்டு கண்ணாடிச் சாமான்கள் வாங்கி வியாபாரம் பண்ணத் தொடங்கினான். கடைவீதியில் ஜனங்கள் வரத்துப்போக்கு அதிகமாகவுள்ள ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு அவன் தினந்தோறும் வியாபாரம் செய்வது வழக்

கம். ஒருநாள் அவன் மாலை நான்குமணிக்குத் தன் கடை
மேடையில் உட்கார்ந்து ஒருபெரிய பிரப்பங்கூடையில் கண்
ணாடிப் பாத்திரங்களை அடுக்கிக் காலமாட்டில் வைத்துக்
கொண்டு பின்வருமாறு ஆலோசிக்கலானான்.

"நம்மிடத்தில் இப்போது ஐம்பது ரூபாய்க்குக் கண்ணா
டிப் பாத்திரங்கள் இருக்கின்றன. இவற்றைத் தலையிலெ
டுத்துக் கொண்டு தெருவில் திரிந்தால் நூறு ரூபாய்க்கு
விற்கலாம். அந்த நூறு ரூபாய்க்கும் சாமான்கள் வாங்கி
அவ்வாறே விற்றால் அது இருநூறு ரூபாயாகும். அவ்
விருநூற்றையும் நம் வர்த்தகத்தினால் நானூறாக்கலாம்.
அதற்கு மேல் தினந்தோறும் தலையில் தூக்கித் திரிய
வேண்டாம். நல்ல இடத்தில் ஒரு கடையை வாடகைக்கு
அமர்த்திக்கொண்டு கண்ணாடி வர்த்தகம் செய்ய ஆரம்
பிக்கலாம். அதில் ஒன்றுக்குப் பத்துவீதம் லாபம் வரும்.
எல்லாச் செலவும் போக ஐந்து வருஷத்துக்குள் பத்தாயிரம்
ரூபாய் நமக்கு முதல் சேர்ந்துவிடும். அப்புறம் இரத்தின
வியாபாரியாகிப் பத்து வருஷங்களுக்குள் இலக்ஷாதிகாரி
யாகலாம். பிற்பாடு நாம் கலியாணம் பண்ணிக்கொள்ள
வேண்டும். அடுத்த வருஷத்தில் நமக்கொரு குழந்தை
பிறந்து தவழ்ந்து விளையாடும். ஒருநாள் மனைவி வீட்டுவேலை
யைக் கவனித்துக் கொண்டிருக்கும்போது குழந்தை விழுந்
தழும். நாம் 'தடிக்கழுதை! குழந்தையை அழ விடுகிறாயா?'
என்று அவளுக்கு இப்படி ஓர் உதை கொடுப்போம்"
என்று காலின் கீழிருந்த கூடையை உதைத்தான். உடனே
அதிலிருந்த கண்ணாடிச் சாமான்கள் நிலத்தில் விழுந்து
ஒன்றுக்கும் பயனில்லாமல் உடைந்து போயின.

அப்புறம் அலநாஷர் அறிவு தெளிந்து 'அந்தோ!
என்ன காரியம் செய்துவிட்டோம்! மனோராஜ்யம் செய்து

முதலுக்கே கேட்டை உண்டுபண்ணிக் கொண்டோமே' யென்று அதிகமாக அழுது வருந்தினான். அவன் முதலில் மனோராஜ்யம் செய்திராவிட்டால், அவன் வியாபாரம் படிப் படியாக விருத்தியாகுமல்லவா? ஆதலால், அவனைப் போலவே மனிதர்களிற் பலர் மனோராஜ்யத்தினால் அநியாயமாக அழிந்து போகிறார்கள்.

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

வாராத-வாராதவைகள். துஞ்சுவது-இறப்பது. மாந்தர்-மனிதர்.

---

6. கதை:—ஒரு காட்டில் வான்கோழி யொன்று தானும் மயிலைப்போல அழகாக வேண்டுமென்று ஆசைப்பட்டது. அப்பறவை தோகையினால்தான் மயில் அழகாக இருக்கிறதென்று நினைத்துக் காட்டில் உதிர்ந்துகிடக்கும் மயிலிறகுகளினால் தன்னை நன்றாய்ச் சிங்காரித்துக் கொண்டது. அப்புறம் அது தன் அழகில்லாத வான்கோழியின் இனத்தில் சேர்ந்துவசிக்க இஷ்டமுண்டாகவில்லை. அது மெள்ள மெள்ள மயில்களோடு கலந்து அவற்றைப போலத் தானும் தன்னுடைய இறகை விரித்து ஆடத் தொடங்கிற்று. இரண்டொரு நாட்களில் வான் கோழியின் விகார நடையும் அஃது ஒட்டவைத்துக் கொண்டிருக்கும் [illegible] சிறகுகளும் மயில்களுக்குத் தெரிந்தன. பிற்பாடு, அவைகள் ஒன்று சேர்ந்து அந்தப் பறவையைக் கொத்திக் கொத்தி அதன் எல்லாச் சிறகுகளையும் பிடுங்கி யெறிந்துவிட்டன. வான் கோழி அதிக அழகைக் காண்பிக்க ஆசைப்பட்டதற்கு

உள்ள அழகும் இல்லாமற் போயிற்று. அம்மூடப்பறவை அப்புறம் தன்னுடைய வான்கோழியின் இனத்தில் வந்து சேருவதற்கு வெட்கப்பட்டு வருந்தி அந்த அவமானத்தினாலேயே உயிரைவிட்டது. ஆதலால், நாமும் அவ்வான்கோழியைப்போலப் பிறருடைய செல்வம் பொருள் முதலியவற்றைக் கண்டு ஆசைப்படலாகாது.

உள்ள தொழிய வொருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழு முயிர்க்கு.

கிடையா-கிடைக்கமாட்டா. குவலயம்-பூமி.

---

7. கதை:—முற்காலத்தில் அயகாயகாசுரன் என்று ஓர் அரக்கன் இருந்தான். அவன் பிரமதேவனைக்குறித்து நெடுங்காலம் வரையில் கடுமையாகத் தவம் செய்துகொண்டிருந்தான். ஒருசமயத்தில் அக்கடவுள் அவனுக்கு எதிரில் வந்து 'உன் தவம் பயன்தரும்காலம் வந்தது. உன் விருப்பத்தைச் சொல்' என்றுகேட்டார். அசுரன் 'கருணைக் கடலே! என்னுடல் வஜ்ரமயமாக மாறவேண்டும். எப்படிப்பட்ட தெய்வ படைகளுக்கும் அதனைப் பிளக்கும் சக்தி இருக்கலாகாது. இதுதான் அடியேன் விரும்பும் வரம்' என்றுகேட்டுக் கொண்டான். கடவுள் 'அரக்கர்தலைவனே! இன்றுமுதல் உன் விருப்பப்படியே உன்சரீரம் வஜ்ரமாக மாறிவிடும். ஆனால், இடக்கரத்தின் அகங்கைமாத்திரம் சாதாரணமாக இருந்து வரட்டும். அவ்விடந்தான் உனக்கு உயிர்நிலை. அதனை எப்போதும் காப்பாற்றிக் கொண்டுவா' என்று சொல்லி மறைந்தார்.

அங்காரகாசுரன் அன்று முதல் வஜ்ரவுடலைப் பெற்று அதனால் கருவமடைந்தவனாகித் தேவர்களையும் மதியாமல் அக்கிரமம் செய்துவந்தான். அவன் தனது இடக்கரத்தில் எப்போதும் வில்லைத் தரித்துவந்த படியினாலே, அவனைக் கொல்வதற்கு நெடுங்காலம் வரையில் ஒருவராலும் முடியா மற்போயிற்று. பிற்பாடு, உஜ்ஜயினி யென்னும் பட்டணத் துக் கரசனாகிய சண்டமகாசேனனென்பவன் அவ்வசுரன் நிஷ்டையிலிருக்கும் சமயம் பார்த்து எதிரிற்சென்று 'சண் டைக்கு வா' என்று அழைத்தான். அசுரன் வலக்கரத்தில ஜபமாலை பிடித்துக் கொண்டிருந்தபடியினால் இடக்கரத் தைத் தூக்கி விரித்து 'சற்றுப் பொறுத்துக்கொள்' என்று சைகை பண்ணினான். சண்டமகாசேனன் அதுதான் சமய மென்று வில்லில் பூட்டிச் சித்தப்படுத்தி யிருந்த அம்பை இழுத்துவிட்டான். அவ்வம்பு அசுரன் கரத்தில் புகுந்த படியினால் அவன் அந்நிமிஷத்திலேயே நிலத்தில் விழுந்து மடிந்து போனான். ஆதலால், ஒருவன் எப்படிப்பட்ட உயர்ந்த வுடலைப் பெற்றிருந்தாலும், ஒருநாளில் அழிந் துபோவது நிச்சயம்.

எல்லாப் படியாலு மெண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை—நல்லார்
அறிந்திருப்பா ராதலினாற் கமலநீர்போல
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

பொல்லா-கெட்ட. மலி-நிறைந்த. புன்குரம்பை-அற்பவீடாகும். கமலநீர்-தாமரையிலையின் நீர். பிரிந்திருப்பார்-உலகத்தில் வேறுபட்டிருப்பார்கள்.

---

8. கதை:—ஆதிநாளில் அஸ்தினபுரத்தில் இருந்த திருதராஷ்டிர மன்னவனுக்குத் துரியோதனன் முதலான

நூறு பிள்ளைகளை பிறந்தார்களென்று படித்திருக்கிறீர்களல்லவா? அந்தத் துரியோதனன் தன்னுடைய சிறிய தந்தையின் புத்திரர்களான பாண்டவர்களின் இராஜ்யத்தைச் சூதாட்டத்திஞல் அக்கிரமம் செய்து அபகரித்துக்கொண்டான். அவர்கள் ஒன்றும் மறுத்துச் சொல்லாமல் அப்போதே காட்டுக்குச் சென்று விட்டார்கள். ஆஞலும், துரியோதனனுக்கு மாத்திரம் அவர்கள் இராஜ்யத்திஞல் கொஞ்சமும் சந்தோஷமுண்டாகவில்லை. பாண்டவர்கள் திரும்பிவந்து தன்னேடு சண்டை தொடுப்பார்களென்றும், அவர்கள் ஆயுதபலமும் தெய்வபலமும் பெற்றவர்களென்றும், அவர்களைத் தன்ஞல் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதென்றும் அவன் இரவும் பகலும் எண்ணமிட்டு வருந்தத் தொடங்கினன். நண்பர்கள் எவ்வளவோ சமாதானம் சொல்லியுங்கூட அவன்மனம் தெளிவடையவில்லை. பிறபாடு, அவன் நினைத்தபடி குருக்ஷேத்திரம் என்றவிடத்தில் இருவருக்கும் சண்டை ஆரம்பமாயிற்று. அந்தயுத்தத்தில் அவன் தன்பேராசையின் பலஞக இறந்துபோய்விட்டான். அவன் உலகத்தில் இருக்கும் வரையில் எண்ணமும் விசாரமும் அவமானமுமல்லாமல வேறொன்றையும் அநுபவிக்கவில்லை. ஆதலால், ஒருவனுக்கு ஊழ்வினையின் வண்ணம் பொருள் சேருமேயல்லாமல் முயற்சியின்படி சேரமாட்டாது. முயற்சியிஞல் சம்பாதிக்கக் கூடியது மரியாதை யொன்றே யொன்றுதான்.

ஈட்டும் பொருளமுயற்சி யெண்ணிறந்த வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந் தனம்.

ஈட்டும் - சம்பாதிக்கும். தேட்டம் - தேடத்தக்கது. மகிதலம்- பூமி. தரியாது-நிலைக்காது. கேண்மின்-கேளுங்கள். காணும்-இரண்டும் அசைகள்.

9. கதை:—முன்பு சோழதேசத்தில இளையான் குடியில் மாறனென்ற ஒருவர் இருந்தார். அவர் தம்மிடத்தில் வந்து யாசித்தவர்களுக்கு இல்லையென்னுமல ஈதலை என்றும் விரதமாகக்கொண்டவர். அதிகமான தானதருமங்களினால் அவர் செல்வம் நாளடைவில் குறைந்து அவரும அவர் மனைவியும் இரண்டொரு சமயங்களில் பட்டினியும் இருக்கத்தொடங்கினார்கள். அப்படிப்பட்ட தருணத்தில ஒருநாள இரவு விடாமழைபெய்கையில ஒரு கிழவர் மழையில் நனைந்து அவர் வீட்டுக்கு வந்தார். மாறனாரும அவர்மனைவியும . அவர் கையைப்பிடித்து உள்ளே அழைத்துக் கொண்டுசென்று வேறு வஸ்திரம் கொடுத்து உபசாரஞ் செய்தார்கள். அப்புறம் அவருக்குச் சாப்பாடு அளிப்பதன் பொருட்டு மாறனார் அன்று காலையில் தாம நாற்று விடுவதற்கு வயலில் தெளித்து வந்திருந்த நெல் விதைகளை அம்மழையில நனைந்துகொண்டு சென்று ஒரு கூடையில வாரி யெடுத்துவந்து மனைவி கையில கொடுத்தார். அந்நாயகி தன் பட்டினியையும பொருட்படுத்தாமல அவற்றைக் கழுவிச சுத்தஞ்செய்து வறுத்துக் குற்றி அரிசியாக்கிச சமைத்தாள்.

பின்பு மாறனார் கிழவரை யெழுப்பிக் கைகால் முதலியவற்றைச் சுத்தம செய்துகொள்ளப் பண்ணி அழைத்துவந்து ஆசனத்தில் அமர்த்தி உண்பித்தார். அவ்விருவரும் வந்த விருந்தினரைச் சரியானபடி உபசரிப்பதற்கில்லையே யென்று வருத்தப்பட்டார்களே யல்லாமல், அன்று காலைமுதல் தாங்கள பட்டினி கிடந்ததைப்பற்றிக் கொஞ்சமும் கவனிக்கவேயில்லை. ஆதலால், நல்ல குடியிற் பிறந்தவர்கள கஷ்டம் வந்துவிட்டதென்று தங்களிடத்தில் வந்தவர்களுக்கு இல்லையென்று சொல்லமாட்டார்கள்.

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றாற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலும்
இல்லையென மாட்டா ரிசைந்து. 9

பெருக்கு-பிரவாகம். அடிசுடும்-அடியைச்சுடுகின்ற. ஊட்டும்-உண்பிக்கும். ஏற்றவர்க்கு-யாசித்தவர்களுக்கு. நல்கூர்ந்தாராலும்-பிச்சையெடுத்தாராலும். இசைந்து-மனம் பொருந்தி.

---

10. கதை:—நெடுங்காலத்துக்கு முன்பு சிருஞ்சயன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் பலவிதமான தவங்களைச்செய்து, முடிவில் ஒரு புத்திரனை அடைந்தான். அச்சிறுவன் சிரிக்கும் போதெல்லாம் வாயிலிருந்து பொன்மணிகள் உதிர்ந்துகொண்டிருக்கும். அதனால், பெரியவர்கள் அவனுக்குச் சுவர்ணஷ்டீவி என்று பெயர் வைத்தார்கள். அச்சிறுவன் வளர்பிறையைப் போல வளர்ந்து, கல்வி கேள்விகளிற் சிறந்து, நல்லொழுக்கத்திலும் உயர்ந்து விளங்கினான். அவன் எத்தனை தடவை சிரித்தாலும் அத்தனை தடவையும் குறைவில்லாமல் பொன்மணிகள் உதிர்கின்ற காரணத்தினால் எல்லா அரசர்களும் அவனை ஓர் அபூருவமான பிறப்பென்று கருதித் தரிசித்து வந்தார்கள். அந்தச் சுவர்ணஷ்டீவி ஒரு சமயத்தில் வேட்டையாடுவதற்குக் காட்டுக்குப் போன போது புதரில மறைந்திருந்த ஒரு பெரும் புலி திடீரென்று பின்புறமாக வெளிப்பட்டு வந்து அவனைக்கடித்துக் கொன்று விட்டது. சுவர்ணஷ்டீவி துன்மரணமாக இறந்துபோய் விட்டான்.

அவன் மரணச் செய்தி சிருஞ்சயனுக்குத் தெரிந்தது. அவன் நிலத்தில் விழுந்து புரண்டும், தலைமயிரைப்பிய்த்தும், பலவாறு பிதற்றியும், ஊணையும் உறக்கத்தையும் துறக்

தும் கதறியழத் தொடங்கினான். இந்திரன் முதலான தேவர்களும் அவன் துக்கத்தைக்கண்டு வருந்தினார்கள். அப்புத்திரன் மரணத்துக்கு உலகத்திலுள்ள எல்லா மனிதர்களும் துக்கம் கொண்டாடினார்களென்றால் அவன் அருமையைச் சொல்ல முடியுமா? சிருஞ்சயன் புத்திரசோகத்தைப் பொறுத்துக்கொள்ள முடியாமல் நெருப்பில் விழுந்திறக்கத் தீர்மானித்தான். அப்போது நாரதமுனிவர் வந்து "அரசனே! வருத்தப்படவேண்டா. நாமனைவரும் இறப்பது நிச்சயமேயல்லாமல் இருப்பது நிச்சயமன்று; நாம் யுகயுகங்களாக அழுது புரண்டு துக்கம் கொண்டாடினாலும் இறந்தவர்கள் எழுந்துவரப் போவதில்லை. இறந்தவர்வழியை இருக்கின்றவர் பின்பற்றுவதுதான் உலகவழக்கம். ஆதலால், மனத்தைச் சமாதானம் பண்ணிக்கொள்!' என்று அவனுக்கு ஆறுதல் கூறி அவன் மரணத்தைத் தடுத்தார். ஆதலால், இறந்தவர்களை நினைந்து வீணுக்கு வருந்தலாகாது.

ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

ஆண்டு—வருஷம். மாண்டார்—இறந்தவர். வேண்டா—அழவேண்டா. இட்டு-யாசகர்க்குக்கொடுத்து. உண்டு—சாப்பிட்டு.

---

11. கதை:—காஸ்மீர தேசத்தில் உஷஸ்தி யென்றோர் அந்தணர் இருந்தார். அவர் சாமவேதத்தைப் பொருளோடு நன்றாக ஓதியுணர்ந்தவர். ஒழுக்கத்தில் மிகுந்தவர். அவருக்கு யாகங்களை நிறைவேற்றுவிக்கின்ற எல்லாச் செய்கைகளும்

நன்றாகத் தெரியும். அந்தத் தேசத்தில் பெரும்பாலும் அவ
ரில்லாமல் யாகங்கள் நடப்பதில்லை. ஒருசமயத்தில் அவர்
இருந்தநாட்டில் மழைபெய்யாமல் பெரும்பஞ்சம் பரவி
வருத்தந் தொடங்கிற்று. அதிகமான ஜனங்கள் உணவில்
லாமல் இறந்துபோனார்கள். உஷஸ்தி என்ன செய்வார்!
இருந்தவற்றைக் கொண்டு சிலநாள் காலக்ஷேபம் பண்ணி
னார். நின்று தின்றால் குன்றும் குறையுமல்லவா? அவரி
டத்திலிருந்த எல்லாத் தானியங்களும் செலவழிந்துபோ
யின. அவரும் அவர் மனைவியும் இரண்டு நாட்கள்வரை
யில் பட்டினி இருந்தும் பார்த்தார்கள். பிறகு அந்த உயர்ந்த
அந்தணரும் அவர்மனைவியும் ஊர் ஊராகச் சென்று 'எங்க
ளுக்குக் கொஞ்சம் உணவு தாருங்கள்! எங்களுக்குக் கொஞ்
சம் உணவுதாருங்கள்' என்று கெஞ்சிக் கெஞ்சிக் கேட்கத்
தொடங்கினார்கள்.

அங்கிருந்தவர்கள் கொடுக்க முடியாதென்றும், கொடுப்
பதற் கில்லையென்றும் சொல்லிக் கதவை அடைத்துக்
கொண்டார்கள். பிற்பாடு அவ்விருவரும் பசியினால் வருந்தி
ஒருயானைப் பாகனைக்கண்டு 'அப்பா! பசியால் காதடைக்
கின்றது; கண்கள் தெரியவில்லை; நடை தள்ளாடுகின்றது.
எங்களுக்கு ஏதாவது கொஞ்சம் உணவுகொடு! இல்லா
விட்டால் நாங்கள் இறந்துபோவது நிச்சயம்' என்று
சொல்லி யாசித்தார்கள் அந்தப்பாகன் 'ஐயா! கொஞ்சம்
பயற்றுச் சுண்டல் இருக்கின்றது; தருகிறேன்; ஆனால் அது
யானையும் நானும் என் மனைவியும் தின்று மிகுந்த மிச்சம்;
அதனைத் தின்று கொஞ்சம் முன்பசியை ஆற்றிக்கொள்ளுங்
கள்; ஆபத்துக்குப் பாபம் இல்லை;' என்றுசொல்லிச் சுண்ட
லைக் கொடுத்தான். அந்தணரும் அவர்மனைவியும் அதனைச்
சந்தோஷமாகப் பெற்றுத் தின்று பசி நீங்கினார்கள். ஆத

லால், ஒருவன் யாசகஞ்செய்தாவது வயிற்றுக்குச் சோறளிப்பது கடவுளுக்குச் சம்மதம்.

ஒருநாளுணவை யொழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்த லரிது.

ஒழியாய்-நீக்கமாட்டாய். ஏலாய்-கொள்ளமாட்டாய். என்நோ-உனக்காக நான்படும் வருத்தம். இடும்பை-துன்பம். கூர்-மிகுந்த.

---

12. கதை:—முன்னொருகாலத்திலே சோழநாட்டைச்சேர்ந்த ஆறையூரில் வாணமுதலியார் என்று ஒருவர் இருந்தார். அவருக்கு விளைநிலங்கள் அதிகமாக இருந்தன. சோழநாட்டிலே பாதிக்கு மேல் அவருக்குச் சொந்தமானது. அவருக்கு ஒரு புத்திரன் உண்டு. அவரிடத்திலே ஏகன் என்று ஓர் அடிமைப் பறையன் இருந்தான். வாணமுதலியார் தம் புத்திரனது இளவயதிலேயே இறந்துபோனார். அவர் இறக்குந் தருணத்தில் ஏகனை அழைத்துத் தாம நிலவறையிலே புதைத்து வைத்திருக்கும் ஏழு கோடி திரவியத்தையும் புத்திரனுக்கு வயது வந்தபிற்பாடு ஒப்புவிக்கும்படி அவனிடத்திலே இரகசியமாகச் சொல்லி அவனையே தம் புத்திரனுக்கு இரக்ஷகனாகவும் நியமித்துப் போனார். ஏகன் அவர் புத்திரனைக் கவிச்சக்ரவர்த்தியான கம்பரிடத்திலே கல்வி கற்கச்செய்தான். அந்தப் புத்திரன் தமிழ்ப்பாஷையைக் குறைவில்லாமல கற்று அறிவும ஆற்றலும் அடைந்தபிற்பாடு, தந்தையின் நிலங்களைத் தானே கைப்பற்றி எல்லாக் காரியங்களையும் ஒழுங்காகப் பார்த்துக்கொண்டு வந்தான்.

அப்புறம் ஏகன் ஒருநாள் அந்தப் புத்திரனைத்தனித்து அழைத்து யஜமானன் மரணசமயத்தில் தன்னோடு சொல்லிப்போன நிலவறையின் அடையாளத்தைத் தெரிவித்து அதிலுள்ள ஏழுகோடி திரவியத்தையும் கைக்கொள்ளும்படி கூறினன். அப்புத்திரன் அன்றிரவு நிலவறையைச் சோதனைசெய்து உளளேபோன மாத்திரத்தில் அங்கிருந்த பூதம் ஒன்று 'இத்தனை நாளாக நான் இந்தப பொருளைப் பாதுகாத்து வந்திருக்கிறேன். எனக்கு நல்லொழுக்கமுள்ள ஒருவனைப் பலிகொடுத்தாலன்றி உனக்குப் பொருளை ஒப்புவிக்கமாட்டேன்' என்று சொல்லித் தடுத்துவிட்டது. மறுநாள அந்தச் செய்தியை அவன் ஏகனிடத்தில் சொல்லி 'அந்தப்பெருமபொருள பூதத்துக்கே சொநதமாக இருந்துவரட்டும்; நமக்கு வேண்டியதில்லை; இருப்பவற்றைச் செம்மையாகக் கவனித்துக்கொண்டுவந்தால், சில வருஷஙகளுக்குள் அந்தபபொருள விருத்தியாகிவிடும்' என்று கூறினன்.

பிற்பாடு, ஏகன் அன்று ளளிரவில் அந்த நிலவறைக்குப்போயப பூதத்தைக்கண்டு ' வாணமுதலியார் என்னிடத்தில் பொருளை ஒப்புவித்துப்போனர். என் அஜாக்கிரதையினல் நீ அதனைக்கைப்பற்றிக் கொண்டிருக்கிருய். சொந்தக்காரனிடத்தில் பொருளை ஒப்புவிக்க வேண்டுவது எனது முதற்கடமை. என்வார்த்தையைக்கேள்! என் ஒழுக்கம் சுத்தமானது. நீ என்னைப் பலியாக அங்கீகரித்துச் சொந்தக்காரனுக்குப் பொருளை ஒப்புவித்துவிடு!' என்று கூறிக் கத்தியினல் தன் தலையை வெட்டிக்கொண்டு இறந்தான். உடனே பூதம் களிப்படைந்து புத்திரனிடத்தில் பொருளை ஒப்புவித்துத் தானும் அவனுக்கு அடிமையாகி விட்டது. அந்தப் புத்திரன் ஏகன் தனக்குஉதவி செய்ததையும் கம்பர் தனக்குக்

கல்வி கற்பித்ததையும், வாணமுதலியார் தன்னைப் பெற்றுவளர்த்துக் காத்ததையுங்கருதித் தனக்கு ஏகம்ப வாணமுதலி என்று பெயர் வைத்துக்கொண்டான். அவன் தன் பயிர்த்தொழிலை விருத்திசெய்து அதனால் வந்த செலவப் பெருக்கினால சேரன் சோழன் பாண்டியன் என்ற மூன்று அரசாகளையும தன் வசப்படுத்திக்கொண்டு எல்லாருக்கும மேலானவனாக விளங்கினின்றான். அக்காலத்தில் பயிரிலாவது பணத்திலாவது புகழிலாவது ஏகம்பவாண முதலியை நிகர்த்தவர் இலர். கமபர் முதலான மகாகவிகளும் அவனை அதிகமாகப புகழ்ந்து பாடியிருக்கிறார்கள. அவ்வளவு பெருஞ்சிறப்பும் அவனுக்குப பயிாத்தொழிலினால் வந்ததேயன்றி வேறன்று. ஆதலால், பயிர்த்தொழில் எல்லாவற்றிலும் சிறந்தது.

> ஆற்றங் கரையின் மரமு மரசறிய
> வீற்றிருந்த வாழ்வும விழுமன்றே—ஏற்றம்
> உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
> பழுதுண்டு வேறோர் பணிக்கு.

விழும்-விழுந்துபோகும். ஏற்றம்-உயர்வு. பழுது-குற்றம். பணிக்கு-வேலைக்கு.



13. கதை:—அ. வட இந்தியாவில் மிகவும் எளிய ஒரு க்ஷத்திரிய குடும்பத்தில் ஷாஹஜி என்பவருக்குச் சிவாஜி என்ற ஒரு புத்திரர் இருந்தார். அவர் தம் தாயாரிடத்திலும் குருவிடத்திலும் கல்வியும் மதநூல்களும குதிரையேற்றமும் படைக்கலப்பயிற்சி முதலாயினவும் செமமையாகக் கற்றுக்கொண்டார். அவருக்கு இராமாயணம் மகாபாரதம் என்ற

இரண்டு நூல்களிடத்திலும் ஆசையும் பக்தியும் அதிகம். அவருக்கு வயது வந்தபிற்பாடு மொகலாயர்களை அடக்கி மகாராஷ்டிர ராஜ்யம ஒன்றை ஸ்தாபிக்கவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று.

அந்தப் பெரிய காரியத்தைச் செய்து முடிப்பதற்கு வேண்டிய இடம பொருள் ஏவல் முதலியவற்றில ஒன்று வது அவருக்கு அமைந்திருக்கவில்லை. அவர் தந்தைக்கு மிகவும் சிறிய ஜாகீர் ஒன்று சொந்தமாக இருந்தது. அதற்குப் பூனு நகரம்தான் பிரதானமான பட்டணம். அவர் மெள்ள மெள்ளச் சிறிய படை ஒன்றைத் தயாரித்துக் கொண்டுபீஜப்பூர் முதலான மூன்று நகர்களை முற்றுகையிட்டுப போர் செய்து தமக்குச் சொந்தமாக்கினார். பின்பு இராஜகிரியில் கோட்டை கட்டும்போது பீஜப்பூர் அரசன் புதைத்து வைத்திருந்த பொற்கட்டிகளும் இரத்தினக் கற்களும் பெருங்குவியலாகப் பூமியிலிருந்து அவருக்குக் கிடைத்தன. அப்புறம் சிவாஜி அவற்றை முதலாகவைத்துக் கொண்டு படிபபடியாகப பலதேசங்களை அடக்கி அத்தேச வரசர்களைத் தமக்குவருஷந்தோறும் தவறுமல் கப்பம் கட்டி வரும்படி ஏற்பாடுசெய்தார். மொகலாயவரசராகிய ஔரங்கஜீப்பும் சிவாஜியும் வல்லமையிலும் தந்திரத்திலும் ஒருவரை யொருவர் மிஞ்சினவர்கள். சிவாஜி ஔரங்கஜீப்பின் காலத்திலேயே அவர் அதிகாரத்தை மிஞ்சவிடாமல் அடக்கி மகாராஷ்டிர தேசங்களுக்கு அரசராகி இராஜகிரியில் அதிக ஆடம்பரத்தோடு மகுடாபிஷேகம் செய்துகொண்டார். அவர் பெயரால் பொன் வெள்ளி தாமிரங்களில் நாணயங்களும் முத்திரிக்கபபட்டு வழங்கிவந்தன. ஆதலால், ஊழ்ப்படி நன்னிலைக்கு வருகின்றவர்களை ஒருவரும் தடுக்க முடியாது.

6. மொகலாய சக்ரவர்த்தியாகிய ஷாஹஜஹானுடைய மூன்றாவது புத்திரரான ஔரங்கசீப்பு என்பவர் 1658 ல் டெல்லிப் பட்டணத்தில் சிங்காசனம் ஏறினார். அவரிடத்தில் அநேக நல்ல குணங்கள் இருந்தன. ஆனாலும், வட இந்தியா முழுவதையும் அடக்கி மூன்று தலைமுறைகளாக அதிகாரம் செலுத்திவந்த மொகலாய ராஜ்யமானது ஔரங்கஜீப்பின் காலத்தில் சிதறிச் சீர் குலைந்துபோயிற்று. அவர் முகம்மதிய மதத்தில் திடமான பக்தியுள்ளவர். இந்தியாவில் இந்துக்களை ஒழிக்கவிட்டால் ஔரங்கஜீப்பின் அரசாட்சி அழுத்தமாக ஓங்கி வளர்ந்திருக்கும். இந்தியா முழுவதும் முகம்மதிய மதமாக இருக்கவேண்டும் என்பது அவர்கருத்து. அதன் பொருட்டு அவர் முயற்சி செய்ததில் இந்துக்களுக்கும் அவருக்கும் பெரிய பகை உண்டாயிற்று. அந்தப்பகை அப்படியே வளர்ந்து அப்புறம் அவர் அதிகாரத்தை அலங்கோலம்செய்து விட்டது. ஆதலால், ஊழ்ப்படி தீநிலைக்குச் செல்கின்றவர்களை ஒருவரும் தடுக்க முடியாது. சிவாஜி படிப்படியாக உயர்ந்து பெரியராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொண்டதற்கும் ஔரங்கஜீப்பு பாரம்பரியமாகக் கொண்டிருந்த பெரிய ராஜ்யத்தை இழந்ததற்கும் அவரவர்களின் ஊழ்களே காரணமாக இருந்தன.

ஆவாரை யாரே யழிப்ப ரதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல.

ஆவாரை-உயர்வடைகின்றவர்களை. ஓவாமல்-ஒழியாமல். ஐயம்-பிச்சை. அம்புவி-அழகியபூமி.

14. கதை:—ஆதிகாலத்தில் சாந்தீபினி என்ற குருவிடத்தில் கண்ணன் குசேலன் என்று இரண்டு மாணுக்கர் இருந்தனர். கற்கவேண்டியவைகளை இருவரும் அவரிடத்தில் குறைவில்லாமல் கற்றுக்கொண்டு அப்புறம் வேறுவேறு பிரிந்து போயினர். பிற்பாடு கண்ணன் செல்வத்தின் அவதாரமும், குசேலர் தரித்திரத்தின் அவதாரமுமாக விளங்கினர். கண்ணன் இருப்பிடம் துவாரகை என்ற பெரும் பட்டணம். குசேலர் இருப்பிடம் அவந்திநாட்டைச் சேர்ந்த ஒரு பெருங் காடு. குசேலர் அந்தக்காட்டில் ஒரு தழைக் குடிசையில் மனைவியோடு வசித்துவரத் தொடங்கினர். அவருக்கு இருபத்தேழு மக்கள் பிறந்து அவர் தரித்திரத்தை அதிகப்படுத்தினர்கள். தமது மக்களுக்கு மிகவும் அற்பமான ஆகாரம் கொடுத்துக் காப்பாற்றுவதற்குக் கூடக் குசேலருக்கு ஆஸ்தியில்லை.

ஆனல், அவர் அவ்வளவு தரித்திரத்திலும் தமக்குச் செல்வம் இல்லையே யென்று ஒரு நாளாவது வருந்திச சிந்தித்த தில்லை. அன்றாடம் செய்துமுடிக்கவேண்டிய வைதிகச் சடங்குகளைச் சரியாய் நிறைவேற்றிக்கொண்டு காட்டில் நுழைந்து காய்களையும், கனிகளையும், கிழங்குகளையும், கீரைகளையும், மூங்கிலரிசிகளையும் தேடிக்கொண்டுவந்து மனைவிகையில் கொடுப்பார். அவள் அவற்றைப் பக்குவப்படுத்தி மக்களுக்கும் கணவனுக்கும் கொடுத்து மிகுந்தவற்றை உண்பாள். அவர்கள் வாழ்க்கையில் எவ்விதமான குறையும் தோன்றவில்லை. அவர்கள் அப்படியே வனத்தில் பலவருஷகாலம் வாசம்செய்துவந்தார்கள். குசேலர் ஒருவரிடத்தில் சென்று தமது இல்லாமையைச் சொல்லி யாசகம் செய்வதைக் காட்டிலும் உயிரைவிட்டு விடுவது மேல் என்று முடிவுவரையில் நினைத்துக்கொண்டிருந்தார்.

அவர் ஒழுக்கத்தை அனைவரும் புகழ்ந்தனர். பிற்பாடு ஒரு சமயத்தில் கண்ணபிரான் அவருடைய நலவொழுக்கத்தைக் கொண்டாடி அதிகமான செல்வத்தைக் கொடுத்தனுப்பி அவரைக் கவுரவப்படுத்தினார். ஆதலால், ஒருவன் எத்தனை ஏழையாக இருந்தாலும் மானத்தைப் போக்கிக்கொண்டு யாசகம் செய்யாதிருப்பது மேன்மையானது.

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி யிடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால வுறும்.

மூத்த-முற்பட்ட. இச்சை-தோத்திரம். இடித்து-பலராலும் நெருக்கப்பட்டு. உண்கை-உண்ணுதல். சால-மிக. உறும்-பொருந்தும்.

---

15. கதை:—முன்னொரு காலத்தில் மிருகண்டு என்று ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு நெடுநாள் கழித்து ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு மார்க்கண்டேன் என்றுபெயர் வைத்தார். சோதிட சாஸ்திரிகளும் வேறுசில பெரியவர்களும் பதினாறுவது வயதில அந்தச்சிறுவன் அற்பாயுளாக இறந்துபோவானென்று சொன்னார்கள். அவ்விஷயம் மெள்ள மெள்ள மார்க்கண்டேனுக்குத் தெரிந்தது. அவன் அம் மரணத்தை நீக்கிக் கொளவதன்பொருட்டுச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலயங்கள்தோறும் சென்று அவரை வணங்கிப் பூஜைசெய்து வந்தான். அவன் நிமிஷ நேரமாவது கடவுளைப பக்தி செய்யாமல் இருப்பதில்லை. அவரை ஒருபொழுதும் மறவாமல் மனத்தினாலும வாக்கினாலும் தொழில்களினாலும் பூஜை பண்ணினான்.

கடைசியில் அவன் திருக்கடவூரில் சிவபெருமானைப் பூஜித்துக்கொண்டிருக்கும்போது எல்லா வுயிர்களையும் கொன்று அவர்கள் செய்யும் பாப புண்ணியங்களை அறிந்து சிக்ஷை விதிக்கின்ற இயமனென்பவன் வந்து அவனைக் கட்டிக்கொண்டு போகப் பாசத்தை வீசினான். மார்க்கண்டன் மிகவுமபயந்து சிவபெருமானிடத்தில் அபயம்வேண்டினான். அப்போது அவர் வெளியாகி வந்து தம் காலால் இயமனை உதைத்து மார்க்கண்டனை நோக்கி 'ஒழுக்க முள்ளவனே! நீ இப்படியே என்றும சிரஞ்சீவியாக விருந்து என்னைப் பூஜை செய்து கொண்டிரு! இன்றுமுதல நீ எனக்கு முதற்பக்தன்' என்று வரமகொடுத்து மறைந்துபோனார். ஆதலால், கடவுளைத் தியானிப்பவர்களுக்கு எவ்விதவருத்தமும் உண்டாகமாட்டாது. எல்லாம் நன்மையாகவே முடியும்.

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—உபாயம்
அதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்

அபாயம்—ஆபத்து. மதி ஆகும்-ஞான முண்டாகும். அல்லாத-அதல்லாத. விதி-ஊழ்.

---

16. கதை:—ம. ஆதிநாளில் பகவன் என்றவருக்கும் ஆதி என்பவளுக்கும் சிலபிள்ளைகள பிறந்தார்கள். அவர்களில் பகவன் அந்தணகுலம். ஆதி இழிகுலம். இவர்களுக்குப் பிறந்த மக்களில் ஒரு குழந்தை கல்வி கேள்விகளிற் சிறந்த ஓர் அந்தணன் வீட்டில வளர்ந்தது. அவ் வந்தணன் அதற்குக் கபிலர் என்று பெயரிட்டு உபநயனம செய்து தன் குலத்துக்குச் சொந்தமான வேதம் முதலானவற்றைக் கற்பித்து வந்தான். கபிலர் அவற்றைக் குறைவில்லாமல் கற்று வேதாந்த

நூல்களிலும் விசேஷ ஞானமடைந்து சிறப்புற்று அந்தண ராக விளங்கினர்.

அவ்விருவருக்கும் பிறந்த மற்றொரு குழந்தை கல்வி கேள்விகளிற் சிறந்த ஒரு வள்ளுவன் வீட்டில் வளர்ந்து வந்தது. அவர்கள் அதற்குத் தமிழ்ப்பாஷையைக் கற்பித் தார்கள். அங்கு வளர்ந்த காரணத்தினுல் அந்தக் குழந்தை வள்ளுவர் என்று பெயர் பெற்றுத் தமிழ் இலக்கண இலக்கி யங்களைக் கற்றுப் பெருமை யடைந்தது. திருக்குறள் என் னும் தமிழ் வேதமாகிய உயர்ந்த நூல இன்னமும் வள்ளுவர் சிறப்பை விளக்குகின்றது. நம தமிழ் நாட்டில திருக்குற ளுக்குச் சமமான நூலும திருவள்ளுவருக்குச் சமமான பண்டிதரும் இல்லை யென்பது நிச்சயம். கபிலர் திருவள் ளுவர் இருவரும் உலக ஞானத்தில் தலைமை பெற்றதுபோல வே தத்துவ ஞானத்திலும் தலைமைபெற்று விளங்கினார் கள. மழைத்தண்ணீர் தான் சென்றடைந்த நிலத்தின் தன்மை யைப் பொருந்தி விளங்குவதுபோலக் கபிலரும் திரு வள்ளுவரும தாம் வளர்ந்த குலங்களின் தன்மைகளையுற்றுக் கபிலர் அந்தணராகவும் திருவள்ளுவர் வள்ளுவராகவும் விளங்கினர்.

6. முற்காலத்தில் சோழநாட்டில் திருவெண்ணெ நல்லூ ரில் சடையப்ப முதலியார் என்று ஒரு பெரிய பிரபு இருந் தார். அவர் கம்பர் முதலான மகாகவிகளால புகழப்பட்டவர். தம்மை வந்து யாசித்தவர்களுக்கு இல்லையென்னுமல கொடுக் கும இயல்பையுடையவர். தமிழ்நாட்டிலிருந்து அரசு புரிந் துவந்த சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தர்களும் அவ ருக்குச் சரியாசனம் கொடுத்துக் கவுரவப்படுத்திவந்தார்கள். ஒரு சமயத்தில் சடையப்ப முதலியார் இராஜத்துரோக சம் பந்தமான குற்றம் செய்தாரென்று அந்நாட்டரசன் அவ

ருடைய எல்லாப் பொருள்களையும் அபகரித்துக் கொண்டான். அவரும் அவர் மனைவியும் வீட்டுக்குள்ளேயேயிருந்து வறுமையோடு காலங்கழித்தார்கள்.

அக்காலத்தில் ஒருநாள் மாலைப்போதில் ஒரு தமிழ்ப் புலவன் வந்து அவர் முன்போலவே நன்னிலைமையில் இருப்பதாக நினைத்துக்கொண்டு தனக்குப் பரிசு தரும்படி வேண்டினான். முதலியார் தம்மிடத்தில் ஒன்றும் இல்லையென்று சொல்வதைக்காட்டிலும் இறந்துவிடுவது மேலானதென்று நினைத்துக்கொண்டு உள்ளே சென்று ஒருகுடம் கொதிநீர் வேண்டும் என்று மனைவிக்குச் சொன்னார். அவ்வம்மையும் அப்படியே அந்நீரைச் சித்தஞ்செய்து கொடுத்தாள். அவர் அந்தக் கொதிநீரை யெடுத்துக் கொண்டு கொல்லைக்குச்சென்று அங்கு நெடுநாளாக வளர்ந்திருந்த ஒரு புற்றில் ஊற்றி அதில் கையை நுழைத்தார். அவர் எண்ணமானது 'புற்றிலுள்ள பாம்பு கோபத்தோடு வெளியில்வந்து கையைக் கடிக்கும்; உடனே விஷம் தலைக்கேறி இறப்போம்' என்பதுதான். ஆனால், காரியம் அப்படி நடக்கவில்லை. புற்றுப் பாம்பு கொதிநீரின் சூட்டைத் தாங்கமுடியாமல் புஸ் என்று சீறிக்கொண்டு வெளியில் வந்தது. முதலியார் கை அந்தத்துவாரத்தை அடைத்துக் கொண்டிருந்தபடியினால் அப்பாம்பு அவர் கையைக் கண்ட மாத்திரத்தில் அப்படிச் செய்யாமல் தான் நெடுநாளாகப் பத்திரப்படுத்தி வைத்திருந்த உயர்ந்த மாணிக்கத்தைக் கையில் கக்கிச் சென்றுவிட்டது. முதலியார் மாணிக்கத்தைக் கண்டு சந்தோஷித்து அது கடவுள் அருளென்று புகழ்ந்து அப்படியே கொண்டுவந்து புலவனிடத்தில் கொடுத்துவிட்டார். ஆதலால், பெரியோர்கள் தரித்திரம் வந்த காலத்திலும் தம்மிடத்தில் வந்து யாசித்தவர்களுக்கு இல்லையென்று சொல்லமாட்டார்கள்.

6. நாகரிகமில்லாத நெடுங்காலத்துக்கு முன்பு கருடனுக்கும் நாகர்களுக்கும் ஒரு சண்டையுண்டாயிற்று. அந்தச்சண்டையில் கருடன் கோபங்கொண்டு பாதாளத்திலிருந்த நாகர்களையெல்லாம் கொல்லத் தொடங்கினான். நாகர்கள் தோல்வியடைந்து, வருஷம் ஒன்றுக்கு ஒரு நாககுமாரனைக் கருடனுக்குக் காணிக்கை செலுத்துவதாக உடன்படிக்கை செய்து கொண்டார்கள். வருஷந்தோறும் கருடன் அந்நாககுமாரனை உணவாகத் தின்றுவிடுவான். நெடுநாளவரையில் அவ்வழக்கம் அப்படியே நடந்துவந்தது. ஒரு சமயத்தில் சங்கசூடன் என்னும் நாககுமாரனுக்கு அம்முறை வந்தது. அவன் அரசனிடத்தில் விடை பெற்றுவந்தான். அவன் தாயார் மகனைப் பிரியமுடியாமல் வருந்தித் தொடர்ந்துவரத் தொடங்கினாள். அந்தத் தாயாரின் துக்கம் பார்த்தவர்களுக்கு அதிக வருத்தத்தை உண்டுபண்ணிற்று.

அப்பொழுது ஜீமூதவாகன் என்னும் அரசகுமாரன் தற்செயலாக அவர்களைக் கண்டு அந்தத்தாயாரைத் தேற்றரவு செய்வதன் பொருட்டுச் சங்கசூடனுக்குப் பதிலாகத் தான் கருடனுக்கு உணவாகச் சென்றான். கருடனும் அவனை நாககுமாரனென்றே நினைத்துக் கொத்திப் புசிக்கத் தொடங்கினான். ஜீமூதவாகனன் கொஞ்சமாவது வருத்தம் கொள்ளாமல் தன் உடம்பிலுள்ள மாமிசங்களையெல்லாம் திருப்பித் திருப்பிக் காண்பித்து 'நன்றாக உண்டு பசியாறுங்கள்' என்றான். அவன் பேச்சிலிருந்து கருடன் அவனை நாககுமாரன் அல்லவென்று நிச்சயித்து உண்மை தெரிந்து 'பெருந்தன்மையுள்ளவனே! அறியாமல் நேர்ந்த என் பிழையை மன்னித்துக்கொள்; அமிருதத்தைக் கொண்டுவந்து உன் உடம்பை உடனே குணப்படுத்தி உனக்குச் சந்தோஷ

முண்டாக்குகிறேன்' என்று பரிந்து கூறினான். ஜீமூதவாகன் 'வீரனே!' என்னுடம்பைப் பற்றி எனக்குக் கவலை கிடையாது. எனக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்கு எண்ணமிருக்குமானால், இன்றுமுதல நாககுமாரர்களைத் தின்னவேண்டாம்; அதொன்றுதான் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பது' என்று சொன்னான். பின்பு கருடன் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு அமிருதத்தினால் அவன உடம்பைக் குணப்படுத்திப் போனான். ஆதலால், பெரியவர்கள் தங்கள் உயிரைக் கொடுத்தாவது பிறருக்கு உதவி செய்வார்கள.

6. முன்னொரு காலத்தில இராமன் என்பவன் தந்தை கட்டளைப்படி பதினான்கு வருஷம வரையில வனத்தில் வாசம் செய்வதற்குப் போனான். அப்போது அவன் மனைவி சீதையும் சகோதரன் இலக்ஷ்மணனும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள. அம்மூவரும தண்டகாரணியத்தில் வாசம் செய்யும்போது இலங்கைப பட்டணத்துக்கு அரசனான இராவணன் என்ற துஷ்டன் சீதையின் அழகைத் தன் சகோதரி சூர்ப்பணகை சொல்லக்கேட்டு எப்படியாவது அவளை அபகரித்து வர வேண்டும் என்று தண்டகவனத்துக்கு வந்தான். அவன் நன்றாக யோசனைசெய்து தன் நண்பன் மாரீசனைப் பொய்ம்மானாகப் போக்கி இராம லக்ஷ்மணர்களைச் சீதையைவிட்டுப் பிரிந்து போகப் பண்ணித் தான் சீதையின் பர்ணசாலைக்கு வந்து பலாத்காரமாக அவளைத் தூக்கிக்கொண்டு பட்டணம் போய்ச் சேர்ந்தான். அங்கே அசோகவனம் என்றவிடத்தில அவளைச் சிறைவைத்துக் கொடுமையில் மிகுந்த இராக்ஷஸிகளை அவளுக்குக் காவலாக நியமித்துத் தனக்கு மனைவியாயிருக்க ஒப்புக்கொள்ளும்படி அவளை நிர்ப்பந்திக்கத் தொடங்கினான். பத்துமாதகாலம்

வரையில் சீதை அவ்விடத்தில சிறையிருந்து அதிகமாக வருந்தியும் அவள் இராவணன் விருப்பத்திற்கு இணங்கவி ல்லே. அந்தத் துஷ்டன் நயத்திலும் பயத்திலும் பலவித மாக முயற்சி செய்தும் சீதை கொஞ்சமும் தவருமல் தன் கற்பைக் காப்பாற்றிக்கொண்டிருந்தாள். ஆதலால், குலப் பெண்களுக்குக் கற்பை காட்டிலும் வேறு சிறந்த ஆபரணம் கிடையாது.

*தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம்கொடையால்*
*கண்ணீர்மை மாருக் கருணையால்—பெண்ணீர்மை*
*கற்பழியா வாற்ருல் கடல்சூழ்ந்த வையகத்துள்*
*அற்புதமா மென்றே யறி.*

நிலநலம்-நிலத்தின் செழுமை. தக்கோர்-பெரியவர். -கொடை- கொடுத்தல். நீர்மை-குணம். மாரு-நீங்காத. ஆறு-விதம்.

---

17. கதை:—விதர்பபதேசத்தில சுவேதன் என்று ஓர் அரச குமாரன் இருந்தான். அவன் தன்னுடைய இளமபிராயத்தி லேயே அரசசுகங்களை வேண்டா என்று வெறுத்துக் காட் டுக்குச்சென்று கடுந்தவம் புரியத் தொடங்கினுன். அவன் தவத்தைக்கண்டு எலலா முனிவர்களும் சந்தோஷப்படுவார் கள். அவன் தினந்தோறும் அந்தக் காட்டில் உள்ள உயர்ந்த பழஙகளையும் சுவையுளள கிழங்குகளையும் கொண்டுவந்து உண்பான். அவனுடைய சாப்பாட்டுச் சமயத்தில் எவரே னும் எளியவர் வந்து 'ஐயா! மிகவும் பசிக்கின்றது; கொஞ்சம் உணவுதாருங்கள!' என்று கேட்டால் சுவேதன் இது தபசிகள் வசிக்கும இடம் 'இந்த உணவை உஙகளுக்குக் கொடுத்து விட்டால் நான் பட்டினி கிடக்கவேண்டும்; அத

னால் தவத்துக்குப் பயனுண்டாகும். நீங்கள் மற்றவரிடத்துக்குப்போய் யாசித்துப் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று சொல்லி யனுப்பிவிட்டான். அவன் ஒரு தடவையாவது எளியவர்களுக்கு அன்னமிட்டதில்லை. அப்படியே தவஞ்செய்த அவன் மகிமையினால் உயர்ந்த பதவியைப் பெற்றுச் சத்தியலோகம் போனான்.

அங்கே அவனுக்கு அதிக பசிநோயுண்டாயிற்று. அவன் பிரமதேவனைக் கண்டு தன் பசியைத் தணிக்கவேண்டுமென்று கேட்டான். அவர் 'சுவேதனே! நீ தவஞ்செய்யும்போது எளியவர்களுக்கு அன்னமிடாமல் உன் வயிற்றைமாத்திரம் நிரப்பிக்கொண்டு வந்தபடியால் உனக்கு இந்தத் துன்பமுண்டாயிற்று. நீ இந்நேரமும் முன்பு தவஞ்செய்துவந்த மடத்துக்குப் போனால், உன்னுடல் அங்குள்ள [illegible] கிடந்துகொண்டிருக்கக் காண்பாய். அதனைத் தின்று உன் பசியைத் தணித்துக் கொண்டுவா! சில காலத்துக்குப் பின்பு அகஸ்தியமுனிவர் அவ்விடத்துக்கு வருவார். அவர் தரிசனத்தினால் சாபம் நீங்கும்' என்று சொன்னார். சுவேதன் அவ்வண்ணமே நெடுங்காலம் வரையில் அருவருப்போடு தன் விதியை நொந்துகொண்டு நாள்தோறும் தன் பிணத்தைத் தின்று காலங் கழித்துவந்தான். நெடுங்காலத்துக்குப் பின்புதான் அவனுக்குச் சாபவிமோசனமாயிற்று. ஆதலால், ஒவ்வொருவரும் இரப்பவருக்கு இல்லையென்னாமல் அன்னமிட்டு உபசரித்துவரவேண்டும். வினைக் கடவுளை வெறுத்தலிற் பயன்கிடையாது.

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்

தருமபாவு மென்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல.

செய்-முன்செய்த. எய்த-பொருந்த. இருநிதியம்-பெரிய திரவியம். அறும்-நீங்கும். இடார்க்கு-கொடாதவர்களுக்கு. வெறும்பானை-உள்ளே ஒன்றுமிடப்படாதபானை.

---

18. கதை:—முன்பு கஜினிப்பட்டணத்தை முகம்மது என்ற ஒரு பெயர்பெற்ற வீரன் பரிபாலித்து வந்தான். அவனுக்குத் தன் பொக்கிஷத்தை இரத்தினங்களையும் பொன் வெள்ளிக கட்டிகளையும ஆபரணங்களையுங் கொண்டு நிரப்பிக்கொள்ளவேண்டுமென்று ஆசை யுண்டாயிற்று. அதனைப் பூர்த்தி செய்யும்பொருட்டு அவன் ஒரு பெரும் படையைத்திரட்டிக்கொண்டு வட இந்தியாவுக்கு வந்து ஐந்தாறு தடவை வரையில் அரசர்களோடு சண்டை செய்து அவர்கள பொக்கிஷங்களையெல்லாம் கொள்ளை யிட்டுக்கொண்டு போனான். அவன் பொக்கிஷம் அப்போதும் நிறைவடையவில்லை. கொஞ்சங் குறைந்தது.

அப்புறம் வடஇந்தியாவிலுள்ள தேவாலயங்களில் நுழைந்துஅங்கு இந்துக்களால பாரம்பரியமாகப் புதைக்கப்பட்டும், திருவாபரணங்களாக உபயோகிக்கப்பட்டும் வந்த இரத்தினங்களையும் ஆபரணங்களையும் கொள்ளையிட்டுக் கொண்டுபோய்ச் சேர்த்தான். அந்தப் பெரும் பொருள்களில் அவன் தன் போர்வீரர்களுக்கும் கொஞ்சம் கூடப் பாகம் கொடுக்காமல் பொக்கிஷத்தை நிரப்பினான். அதனால், அவனுக்கு விக்கிரகம் உடைப்போனென்று ஒரு பெரிய பெயர் பிரசித்தமாயிற்று. சிலநாளைக்குப் பிற்பாடு,

அவன் பகைவனொருவன் கஜினிப்பட்டணத்தை முற்றுகை யிட்டு அவனை வெற்றிகொண்டு அவன் சண்டை முன்னிலையில் உயிரினும் அருமையாகத் தேடிக் கொண்டுவந்த அரும் பொருள் எல்லாவற்றையும் அவன் 'ஐயோ ஐயோ' வென்று வருந்திக் கண்ணீர் வடிக்கும்படி அரைக்கணத்தில் அபகரித்துக்கொண்டுபோய் விட்டான். கஜினி மகமமது ஒருவருக்கும் கொடாமல் சேர்த்த கொள்ளைப் பொருள் அவ்வளவும் போரின் முன்னிலையில் அவன் பகைவனுக்குச் சொந்தமாயிற்று. ஆதலால், உலோபிகள் தங்கள் செல்வத்தைத் தங்களுடம்பில் காயப்படுத்துகின்றவர்களுக் கல்லாமல் மனமிசைந்து ஒருவருக்குங் கொடுக்கமாட்டார்கள்.

> பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
> உற்றா ருகந்தா ரெனவேண்டார்—மற்றோர்
> இரணங் கொடுத்தா லிடுவ ரிடரே
> சரணங் கொடுத்தாலுந் தாம்.

பெற்றார்-தாய்தந்தைகள். பிறந்தார்-உடன்பிறந்தவர். உற்றார்-சுற்றத்தார் உகந்தார்-சிநேகிதர். மற்றோர்-பகைவர். இரணங் கொடுத்தால்-காயப்படுத்தினால். இடுவர்—கொடுப்பர். சரணங்கொடுத்தாலும்-வந்தனம் செய்தாலும்.

---

19. கதை:—(1 நெடுங்காலத்துக்கு முன்பு நளன் என்ற மன்னவன் நிடதநாட்டைப் பரிபாலித்து வந்தான். ஒரு சமயத்தில் அவனும் புஷ்கரன் என்றவனும் பொழுதுபோக்கின் பொருட்டுச் சூதாடத் தொடங்கினார்கள். அவ்வாட்டத்தில் நளன் தனக்குச் சொந்தமான நாட்டையும் நகரத்தையும் பொருள்களையுமிழந்து அரசாட்சியைப் புஷ்கரனிடத்தில் ஒப்புவித்துவிட்டுத் தன் மனைவி தமயந்தியோடு வனத்துக்

குச் சென்றான். அங்கே அவன் மனைவியின் வருத்தத்தைக் காணச் சகியாமல் ஓரிரவில் அவளை நடுக்காட்டில் விட்டுப் பிரிந்துபோனான். பின்பு தமயந்தி விழித்துக்கொண்டு நளனைக்காணாமல் அந்தக்காட்டில் வருந்தியும் புலம்பியும் அழுது அநேக தந்திரமாகத் தப்பித்து ஒரு வர்த்தகக் கூட்டத்தைத் துணைபற்றிக்கொண்டு மெள்ள மெள்ளத் தன் சிறிய தாயின் தேசமாகிய சேதி தேசம் போய்ச் சேர்ந்தாள். நளன் நாலைந்து நாட்கள் வரையில் அந்தக் காட்டில் அலைந்து கஷ்டப்பட்டுப் பிறகு பிறரிடம் இரந்துண்பதற்கு வெட்கப்பட்டு, பசிப்பிணியின் பொருட்டுத் தன் உருவத்தை மாற்றிக்கொண்டு அயோத்திக்குச் சென்று ருதுபர்ணன் என்ற அரசனைக் கண்டு, தான் குதிரைகளோட்டுதலிற் சிறந்தவனென்றும், சமையல் வேலையில் தேர்ந்தவனென்றும் சொல்லி அவனிடத்தில் அமர்ந்து சிலகாலம் வரையில் ஜீவனஞ் செய்துவந்தான். ஆதலால், பசிவந்தபோது அயலாரிடத்திற் சென்று குற்றேவல் செய்து சேவித்தாவது வயிற்றுக்கு உணவிட வேண்டும்.

பதினோராவது கதையைப் பகுத்துக்கொள்க.

சிலகாலத்துக்கு முன்பு இங்கிலாந்து தேசத்திலிருந்து வர்த்தகக் கூட்டத்தாரிற் சிலர் தங்கள் தேசத்துச் சரக்குகளைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு கடலைக்கடந்து இந்தியாவுக்கு வர்த்தகம்பண்ண வந்தார்கள். அவர்கள் தமது சொந்த தேசத்தில் அதிகமான லாபத்தை எதிர்பார்க்க முடியவில்லை. அக்காலத்தில் இந்தியா அவர்கள் எண்ணத்துக்கு அநுகூலமாக விருந்தது. அவர்கள் முதலில் இந்திய அரசர்களிடத்தில் கொஞ்சம் நிலம் கிரயத்துக்குப் பெற்றுக்கொண்டு அந்நிலத்தில் சிறிய கோட்டைகட்டித் தங்கள் வர்த்தகப் பொருள்

களை வைத்துக் காப்பாற்றி வெளியிற்சென்று வர்த்தகஞ் செய்தார்கள்.

நாள் செல்லச் செல்ல வியாபாரம் விருத்தியாகி அவர்களுக்குப் பொருள் பெருகத் தலைப்பட்டது. அக்காலத்தில இந்தியாவிலிருந்த அரசர்கள் ஒற்றுமையில்லாமல் ஒருவருக்கொருவர் மனஸ்தாபப்பட்டுக் கொண்டிருந்தபடியினால் அவ்வர்த்தகர்கள் சில அரசர்களுக்குச் சண்டையில் உதவி செய்து அவர்களை வெகுமதியாகச் சில தேசங்களையும் அடைந்தார்கள். அப்பால், படிப்படியாக இந்தியாவிலுள்ள எல்லா வரசர்களையும் ஒவ்வொருவிதமாக அடக்கி நாளடைவில இந்தியா மொத்தத்தையும் தாங்களே சொந்தமாகக் கைக்கொண்டு விட்டார்கள். நெடுங்காலத்துக்குப் பின்பு தான் இந்தியா பிரிட்டிஷ் ஜகாதிபத்தியத்துக்குச் சொந்தமாயிற்று. அவர்கள் முதலில கடலைக் கடந்து வந்ததற்குக் காரணம் தங்களுக்கும் தங்கள் இனத்தாருக்கும் சொந்த தேசத்தில் ஜீவனோபாயம் குறைவடைந்திருந்ததேயாகும். ஆதலால், கடலைக் கடந்து ஆடம்பரமாக வர்த்தகம் பண்ணுவதெல்லாம் வயிற்றின் பொருட்டாகவே கடைசியில் முடிகின்றது.

(1) அத்தினபுரத்தில் திருதராஷ்டிரன் புத்திரனான துரியோதனனென்பவன் தன்னுடைய சிறிய தந்தையின் குமாரர்களான பாண்டவர்களைக் கொல்லும்பொருட்டுப் பல விதமான பிரயத்தனங்கள் பண்ணினான். அவர்கள் சாப்பாட்டில் விஷங் கலந்தான். அவர்கள் வீட்டில் நெருப்பிடல் முதலான எண்ணிறந்த அக்கிரமங்களைச் செய்தான். அப்புறம் சூதாட்டத்தின் முன்னிலையில் அவர்களுடைய அரசாட்சியை அபகரித்துக்கொண்டு அவர்களை வனத்தில் ஓட்டினான். அவர்கள் வனத்தில் வசித்து வந்த காலத்தி

லும அவன் அக்கிரமஞ் செய்யாமலிருக்கவில்லை. இராஜாங்க வுத்தியோகஸ்தர்கள அவன் அற்பபுத்தியையும், கொடுஞ்செயல்களையும் அறியாமலுமிருக்கவில்லை. ஆனாலும், அவர்கள துரியோதனனை 'மகாராஜா என்றும், சக்ரவர்த்தி என்றும். செங்கோல மன்னன் என்றும்' புகழ்ந்து பேசித் தங்கள ஜீவனோபாயத்தைக் காப்பாற்றிக்கொண்டு வந்தார்களே யல்லாமல் அவன் அக்கிரமங்களை எடுத்துக்கூறி அவனுக்குப் புத்தி புகட்டத்துணிந்தார்களில்லை. வயிற்றுக் கொடுமையின் பொருட்டுத் துரியோதனன் செயலகளை யெல்லாம நியாயமானதென்று சொலலியும் மேடைகளில் நின்று பிரசங்கித்தும் அவனுக்குச் சன்னிடயில உதவிபுரிந்தும காலங கழித்தார்கள். ஆதலால, சிறிய வர்களைப் பெரியவர்களென்றும, அக்கிரமங்களைக் கிரமங்களென்டும் பேசிக்கொண்டு வயிறுவளர்ப்பது, இவ்வுலகத்தில் தொன்று தொட்ட வழககமாக இருந்து வருகின்றது.

பதின் மூன்றாவது கதையில சிவாஜி மன்னர் தமமுடைய விடாமுயற்சியினால மகாராஷ்டிர ராஜ்யத்தை ஸ்தாபனஞ் செய்து ராஜகிரியில மிகுந்த ஆடம்பரத்தோடு சிங்காசனம் ஏறினரென்று சொல்லப்பட்டதன்றோ! ஒரு சமயத்தில் ஔரங்கசீப்பு என்ற மொகலாயவரசர் சிவாஜி மன்னரை உபாயமாகத் தருவித்து டெல்லிப் பட்டணத்தில் சிறைச்சாலையில் அடைத்துவிட்டார். சிவாஜி மன்னவர் 'முளளை முளளால் வாங்க வேண்டும்' என்னும் பழமொழிப்படி பக்ஷணக் கூடையொன்றில ஒளிந்துகொண்டு வெளி வநது வேற்று வடிவத்தோடு ஊரூராகச் சென்று யாசித்து ஜீவனம் பண்ணி மெள்ள மெள்ளத் தமது பட்டணம்போய்ச் சேர்ந்து ஔரங்கசீப்பின் அரசாட்சியை அடியோடு அடக்குவதற்கு ஆரம்பம் பண்ணினார். ஆதலால்

ஆடம்பரமாக அரசாட்சி செய்வதும், ஒருவரை யொருவர் மோசஞ்செய்து அரசாட்சியை யடைவதும் முடிவில் வயிற்றின் பொருட்டாகவே முடிகின்றது.

f. ஒரு சமயத்திலே ஒளவையார் என்ற பண்டிதையார் திருக்கோவலூருக்குச் சமீபத்தில் போய்க்கொண் டிருந்தார். கிழப்பருவமும் வழிநடக்குமிளைப்பும ஒன்று சேர்ந்து அவருக்குப் பசியை உண்டு பண்ணின. கொல்லை வெளியாதலால் அதனை நீக்கிக் கொள்வதற்கு அங்கே யொன்றுங் கிடைக்கவில்லை. அவர் அதிகமாய்க் களைத்து நடக்கமுடியாமல் வருந்தி ஒருமரத்தடியில் உட்கார்ந்திருந்தார். அப்போது அங்கவை சங்கவை யென்னும் இரண்டு இடைப்பெண்கள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த தங்கள் சகோதரர்களுக்கு அடுத்த கிராமத்திலிருந்து சாப்பாடு கொண்டு வந்தார்கள். ஒளவை அவர்களைக்கண்டு 'சிறுமிகளே! எனக்கு அதிகமாய்ப் பசிக்கின்றது. என்னால் கிராமத்துக்கு நடந்து செல்ல முடியவில்லை. கொஞ்சம் சாப்பாடு கொடுங்கள்!' என்று கேட்டார். அப்பெண்கள் 'அம்மா! தங்களுக்குக் கொடுக்கும்படியான உயர்ந்த சாப்பாடு எங்களிடத்தில் இல்லை. ஏழைகள் பசியைத் தணிக்கத் தக்க எளிய சாப்பாடுதான் இருக்கின்றது. இஷ்டமிருந்தால், எடுத்துக் கொள்ளுங்கள்!' என்று கொடுத்தார்கள்.

ஒளவையார் சந்தோஷத்தோடு பெற்றுக் கொண்டு அச்சாப்பாட்டை யுண்டு பசி நீங்கினார். அவர் அப்புறம் தமது பசி வேளைக்கு அன்னமிட்ட அந்தப் பெண்களைப் புகழ்ந்து பாட்டுப்பாடியும், அவர்கள் கலியாணத்துக்குச் சேரன் சோழன் பாண்டியன் என்ற தமிழ்நாட்டு மூவேந்தர்களையும் தருவித்தும் கௌரவப்படுத்தினார். அவ்விடைப் பெண்களின் கலியாண காலத்தில் அவர் காட்டிய அற்புதச் செயல்கள்

அளவுகடந்தவை. அந்தக்காரணத்தினால் அவரைக் கூழுக்குப்பாடியென்று வந்து சொல்லுகிறார்கள். அந்நாளில் அரசர் மீது கவிபாடிவந்தும் அவர்கள்மேல் பிரபந்தங்களை பண்ணுவதும் வயிற்றின் பொருட்டே [illegible].

சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம்.

சேவித்தும்-சேவகஞ் செய்தும். இரந்தும்-யாசகஞ்செய்தும். தெண்ணீர்-தெளிவான நீரையுடைய. பாவித்தும்-அற்பர்களை உயர்ந்தவர்களாகப் பாவனைசெய்தும். பார்-பூமி. பாட்டிசைத்தும்-கவிபாடியும். போவிப்பம்-போககிவிடுகிறோம். பாழின்-வீணை.

---

20. கதை:—சிலவருஷங்களுக்கு முன்பு காவிரிப்பூம் பட்டணத்தில் மாசாத்துவன் என்று ஒரு பிரபல வியாபாரி யிருந்தான். அவன் புத்திரனுக்குக் கோவலன் என்று பெயர். அந்நாட்டரசன் சரியாசனங் கொடுத்துக் கவுரவிக்கும்படியான அந்தஸ்து அவனுக்குச் சொந்தமாயிருந்தது. கோவலனுக்கு அழகிலும் கற்பிலும் நிகரற்று விளங்கின கண்ணகி யென்பவள் மனைவி. கோவலன் தன் தந்தை செய்த வியாபாரத்தைச் விரும்பிச்செய்து பெரியவர்களோடு நெருங்கிப் பழகாமல், அற்பர்களை நேசித்துக் கெட்டவழிகளில் காலத்தைக் கழிக்க விரும்பினான். அவனுக்கு அந்தப் பட்டணத்திலிருந்த மாதவி யென்னும் பொதுமகளின் நட்புண்டாயிற்று.

சில வருஷங்களில் அவன் ஆட்டக் கச்சேரிகளுக்கும், பாட்டுக் கச்சேரிகளுக்கும், விருந்துகளுக்கும், மாதவிக்குமா

அயலார் வாழ்வைக்கண்டு அழுக்காறடையாமலும் நல்லொ ழுக்கந் தவறாமலும் இருந்துவந்தான். அவன் நல்ல வெண் ணத்தினாலே அவனுக்குக் கண்ணபிரான் மூலமாக ஸ்ரீமகா லக்ஷ்மி திரண்டபொருளையுஞ் சிறந்தபுகழையுங் கொடுத்துக் காப்பாற்றினாள். ஆகலால், நல்லொழுக்கமுள்ளவர்களுக்குத் திருமகள் எல்லாச் செல்வங்களையும் அநுக்கிரகம் பண்ணு வாள்.

நீரு நிழலு நிலம்பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊருமே
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தருஞ்சிவந்த தாமரையா டான்.

நீரும்-நீர்வளமும். நிழலும்-மனை சோலை முதலிய வளங்களும். பொதியும்-நிறைந்த. நெற்கட்டு-நெற்போர.

---

22. கதை:—பதினெட்டாவது கதையைப் படித்துக் கொள்க. ஆதலால், சம்பாதித்த பொருள்களை நிலத்தில் புதைத்து வைக்காமல், தானும் அநுபவித்துப் பிறருக்கும் தருமவழியில் உபயோகப்படுத்த வேண்டும்.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்.

ஆவி-உயிர்.

---

23. கதை:—இருபதாவது கதையில் கோவலனென் பவன் தன்னுடைய எல்லாப் பொருள்களையும் கெட்டவழி

களிற் செலவுசெய்து தொலைத்துவிட்டு மதுரைக்குச் சென்முனென்று சொல்லியிருக்கின்றதல்லவா? அவன் அம்மதுரைப் பட்டணத்தில் தன்மனைவி கண்ணகியை ஓர் இடைச்சேரியில் இருக்கப்பண்ணி, அவள் காற்சிலம்பை விற்று வருவதன் பொருட்டுக் கடைவீதிக்குப் போனான். அங்கே ஓரிடத்தில் நூறுவேலைக்காரர்கள் தன்னைச் சூழ்ந்துநிற்க நடுவில் யஜமானனாக விருந்த ஒரு பொற் கொல்லனைக் கண்டு 'ஐயா! இந்தச் சிலம்பை விலைமதித்துச் சொல்வீரா? விலைப்படுத்தக் கொண்டுவந்திருக்கிறேன்' என்று ஒற்றைச் சிலம்பைக் காட்டினான்.

அந்த பொற்கொல்லன் ஒரு பெரிய போக்கிரி. பாண்டியராஜாவின் அரண்மனைக்கு வேண்டிய ஆபரணங்களை யெல்லாம் அவன்தான் செய்து கொடுப்பவன். அவன் மோசத்துக்குக் கணக்கில்லை. அவன் சிலநாட்களுக்கு முன்பு பாண்டியராஜாவின் முதல்மனைவியின் சிலம்பைப் பழுதுபார்ப்பதற்கு எடுத்துவந்து தன்னுடைய அவசரச் செலவின் நிமித்தம் அவற்றில் ஒன்றை விற்றுவிட்டான். சிலம்பை மறுபடியும் ஈடுபண்ணுவதற்கு அவனுக்குச் சவுகரியமும் சமயமும் கிடைக்கவில்லை. அவன் 'நாளை தருகிறேன்; நாளை தருகிறேன்' என்று கெடுச்சொல்லி வந்தான். கோவலன் சிலம்பைக் கண்டமாத்திரத்தில் அவனுக்குச் சந்தோஷமுண்டாயிற்று. அவன் சிலம்பை வாங்கிக்கொண்டு 'ஐயா! தாங்கள் சற்று இவ்விடத்திலிருங்கள்! நான் அரண்மனைக்குச் சென்று காட்டிக்கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் பாண்டியராஜாவைக்கண்டு 'அரசர் தலைவரே! நான் சில நாட்களுக்கு முன்பு தேவியின் காற்சிலம்பைப் பழுதுபார்ப்பதற்கு எடுத்துப் போயிருந்தேன். அடியேன் வீட்டில் அவ்வாபரணம் களவு போய்விட்டது.

ஆனாலும்; ஆககாதது வேலைக்காரர்களைத் துப்பறிந்து வரு வதற்கு அனுப்பியிருந்தேன். இன்று என்னுடைய நல்ல காலத்தின் அறிகுறியாகச் சிலம்பு திருடிய கள்வன் அச்சி லம்போடு அடியேன் கடைக்கு வந்து உட்கார்ந்திருக்கி றான். பிரபுக்கள் கருணை கூர்ந்து சோதித்துக் குற்றவா ளிக்குச் சிக்ஷைவிதிக்கவேண்டும்' என்று கூறினான். அர சன் சரியாக விசாரணை செய்யாது எதிரிலிருந்த வேலைக்கா ரர்களைப் பார்த்து இப்பொற்கொல்லன் சொல்வது உண்மை யானால் திருடனைக் கொன்று சிலம்பைக் கொண்டுவாருங் கள்!' என்று சொல்லி யனுப்பினான்.

பொற்கொல்லன் வேலையாட்களைப் பணத்தினால் தன் வசப்படுத்திக்கொண்டு கோவலனைக் குற்றவாளியாக்கி அப் போதே சிரசாக்கினை விதிக்கச் செய்துவிட்டான். அது கோவலன் மனைவியான கண்ணகிக்குத் தெரிந்தது. அவள் தன் கோபத்தினால் பாண்டியராஜனை யழித்து மதுரைப் பட்டணத்தையும் பொற்கொல்லனையும் நெருப்புக்கிரையாக் கித் தெய்வத்தன்மை யடைந்தாள். பாண்டியன் அநீதியா கக் கோவலனைக் கொலைவித்தமையாலன்றோ, தன் உயிரை யும் அரசையும் நகரையும் இழந்தான்?

ஆதலால், நியாயசபையில் நியாயவிரோதமாகத் தீர் ப்புச் சொல்லலாகாது. அச்செயல் அவர்கள் குடும்பத்துக் கும் வாழ்வுக்கும் கேட்டையுண்டு பண்ணும்.

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை.

வேதாளம்-பேய். பாதாளமூலி-ஒரு கொடி. சேடன்-பாம்பு. மன்று ஓரப்-டகூபாதம்.

---

24. கதை:-முன்பு எயினனூரில் ஏனாதிநாதரென்று ஒருபடைவீரரிருந்தார். அவர் தம்மிடம் வருகின்றவர்களுக்குப் படைக்கலம் பயிற்றுவித்து, அதனால் வரும் பொருள்களைக் கொண்டு சிவனடியார்களை உண்பித்துத் தொண்டு பண்ணி வந்தார். அவர் குலத்தில் அதிசூரனென்று வேறொருவன் இருந்தான். அவனுக்கும் அதுவே தொழிலாக இருந்தது. ஏனாதிநாதரிடத்தில் கற்பிக்குஞ் சக்தி மிகுதியாக விளங்கின படியால் அதிகமான பிள்ளைகள் அவரிடத்தில் படைக்கலம் பயின்றுவந்தார்கள். அந்தப் பெருக்கத்தைக்கண்டு அதிசூரனுக்குப் பொறாமையுண்டாயிற்று. அவன் ஒருநாள் அவரைக்கண்டு 'ஐயா! நாமிருவருமாக இந்தச் சிற்றூரில் வசிக்கமுடியாது. ஒருவர்தான் வசிக்கவேண்டும். நமக்குள் யாவர் வசிக்கத் தக்கவரென்பதைச் சண்டை முன்னிலையில் நிச்சயஞ் செய்து கொள்வோம். இவ்வூர் ஜயித்தவர்க்குச் சொந்தமாகட்டும்' என்று சொன்னான். ஏனாதிநாதர் அதற்குச் சம்மதித்து மற்றைநாள் அதிகாலையில் அவனாற் குறிக்கப்பட்ட ஒரு போர்க்களத்துக்குப் போனார்.

அதிசூரன் அவரை நேர்வழியில் வெல்ல முடியாதென்பதை நன்றாக அறிந்திருந்தபடியினால் ஓர் உபாயத்தினால் தன்கருத்தை நிறைவேற்றிக் கொள்வதற்குத் தீர்மானித்துத், தன்நெற்றியில் செம்மையாகத் திருநீற்றையணிந்து கேடயத்தினால் அதனைப் பிறரறியாமல் நன்றாக மறைத்துக் கொண்டு குறிப்பிட்ட விடத்தை யடைந்தான். அவன் வேறு மதத்தைச் சார்ந்திருந்த படியால் ஏனாதிநாதர் வாளைச் சுழற்றி வெட்டத்தொடங்கினார். அப்போதுதான் அதி

சூரன் கேடயத்தை நீக்கி அவருக்குத் தனது நெற்றியைக் காண்பித்தான். திருநீறணிந்த நெற்றியைக் கண்டமாத்திரத்திலே அவர் வாளைக் கீழே யெறிந்துவிட்டு அவனுக்குத் தலைகுனிந்து நின்றார். அதிசூரன் அவ்வுபாயத்தினாலே ஜயமடைந்தவனாகி அவ்வூரில் சிறப்படைந்தான். அவன் திருநீறணியாமற் சென்றிருந்தால் அவரால் அப்போதே இறந்து போயிருப்பானல்லவா? ஆதலால், திருநீறு ஒருவனுக்குச் செல்வத்தை யுண்டு பண்ணுவதோடு சில சமயங்களில் உயிரையுங் காப்பாற்றுகின்றது.

b. சாப்பாட்டுக்கு நெய்யில்லாவிட்டால், உணவின் சுவை குறைவடையும். பொரியல், வறுவல், துவையல், அவியல் முதலியவற்றின் சுவையை நெய் அதிகப்படுத்துகின்றது. இன்னும் புத்துருக்கு நெய் உடம்புக்குப் புஷ்டியை யுண்டு பண்ணும். இஃது எல்லாருக்குந் தெரிந்த விஷயம். ஆதலால், நெய் சாப்பாட்டுக்கு அவசியமானது.

c. வெகுகாலத்துக்கு முன்பு இராமபிரான் இலங்கைப் பட்டினத்தை முற்றுகையிட்டு இராவணனைக்கொன்று தம் மனைவி சீதையை மீட்டுக்கொண்டு அயோத்திக்குத் திரும்பினார். அங்கே அவருக்கு அதிக ஆடம்பரமாகப் பட்டாபிஷேகம் நடந்தது. இராவணன் சகோதரனான விபீஷணனும் வாலியின் சகோதரனாகிய சுக்கிரீவனும் அதற்குச் சென்றிருந்தார்கள். இராமர் தம்பட்டாபிஷேக சமயத்தில் அங்கு வந்திருந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான வெகுமதியையளித்தார். அதில் பாரம்பரியமாகத் தம்முடைய அரண்மனைப் பூஜையில் இருந்துவந்த இரங்கநாத விக்கிரகத்தை அது வைத்திருந்த பெட்டகத்தோடு விபீஷணனுக்குக் கொடுத்தார். அவன் அவ்விக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு இலங்கைப்பட்டணம் போனான்.

நடுவழியில அவனுக்குச் சிறுநீர் உபத்திரவமுண்டா யிற்று. அதனால், தற்காலத்தில் திருவரங்கம் திருக்கோயி லுள்ளவிடத்தில் அந்தத் தெய்வப் பெட்டகத்தை வைத்து விட்டுத் தண்ணீரை நாடிச் சென்றான். சற்று நேரங்கழித்துக் கை கால் முதலான உறுப்புக்களைச் சுத்தப்படுத்திக்கொண்டு பெட்டகத்தை யெடுத்தான். அஃது அவனால் எடுக்க முடியவில்லை. அப்போது கடவுள் 'அன்பனே! இவ்விடத் தை நன்றாகக் கவனித்துப்பார்! நிருக்குக் காவேரி கொள்ள டம் என்ற இரண்டுநதிகளும் தெற்கு மேற்கு வடக்கு என்ற மூன்று திசைகளிலும் மாலைபோலப் பெருகியோடுகின்றன. இன்னும் அவ்விரண்டாறுகளும இவ்விடத்துக்குச் செழிப் பையும் அழகையும உண்டுபண்ணுகின்றன. உன்னுடைய இலங்கைப்பட்டினத்தில் இவ்விதமான ஆறுகள் சூழ்ந்த அழகிய இடமில்லை. ஆதலால, பரிசுத்தமும் அழகுமுள்ள இவ்விடத்தில் திருக்கோயில்கொண்டு விளங்குவதற்கு நாம் பிரியப்படுகிறோம். நீ வேண்டும்போது வந்து நம்மைப் பூ ஜித்துக்கொண்டு போ!' என்று திருவாய் மலர்ந்தனர். விபீ ஷணன் அவர் சம்மதத்துக்கு மாறுசொல்ல வகையிலலா மல் வணங்கி விடை பெற்றுக்கொண்டு போனான். இப்போ துங்கூடத் திரிசிராப்பள்ளியிலுள்ள உச்சிப்பிள்ளையார் கோவிலிலிருந்து பார்த்தால், அவ்விரண்டாறுகளும் திருவ ரங்கத்துக்கு அழகு செய்வதைக்காணலாம். ஆதலால, ஆறு கள் தங்களுக்கருகிலுள்ள பட்டணங்களுக்கும் கிராமங்களுக் கும் அழகையுஞ் செழிப்பையும் உண்டுபண்ணுகின்றன.

*d*. ஆதி நாளில் சந்திரகுலத்தில் பாண்டுமகாராஜா வுக்கு ஐந்து புத்திரர் இருந்தார்களென்பதைப் படித்திருக் கிறீர்கள். அவர்களில் மூத்தவருக்குத் தருமபுத்திரர் என்று பெயர். மற்றவர்களைப் பீமன், அர்ச்சுனன், நகுலன், சக

தேவன் என்று சொல்வார்கள். இக்காலத்தில் டெல்லிப் பட்டணம் என்று வழங்கும் இந்திரப்பிரஸ்த நகரத்தில் தான் தருமபுத்திரர் இருந்து அரசு நடத்திவந்தார். துரியோதனன் அவர்களைக் கொல்லும் பொருட்டுச் செய்த உபாயங்களையெல்லாம் தருமபுத்திரர் சகோதரர்களின் உதவியினாலேயே எளிதில் நீக்கிக்கொண்டார். இன்னும் அவர் எவருஞ் செய்ய முடியாத இராஜசூயமென்னும் உயர்ந்த யாகத்தை எல்லா அரசர்களும் புகழ்ந்துகொண்டாடும்படி அவர்கள் உதவியைக்கொண்டு நிறைவேற்றிப் பெருமையை யடைந்தார்.

அப்புறம் தம்மோடு போர்புரிய வந்த துரியோதனனையும், அவன் சகோதரர்களையும், அவனுக்குத் துணை நின்ற வேற்று அரசர்களையும் பீமன் முதலியவர்களைக்கொண்டு ரணகளத்தில் வென்று வெற்றி மாலை சூடினார். பிற்பாடு, அசுவமேதமென்னும் பெரிய மகாயாகத்தையுஞ் செம்மையாகச் செய்துமுடித்தார். இவையாவும் அவர் தம் சகோதரர்களின் பழுதுபடாத வீரத்தன்மையினாலே நிறைவேறிற்றேயன்றி மற்றெப்படியுமன்று. அச்சகோதரர் இல்லாவிட்டால், அவ்வளவு பெருமையும் அவருக்கு நிச்சயமாய்க் கிடைத்திருக்க மாட்டாதென்றே சொல்லலாம். ஆதலால், உண்மைச் சகோதரர்களால் ஒருவனுக்கு எல்லாநன்மைகளும் எளிதிலுண்டாகின்றன.

([illegible]) முன்பு வனத்தில் தவஞ்செய்துவந்த அத்திரி முனிவருக்கு அநசூயை யென்று ஒரு மனைவி யிருந்தாள். அவள் அழகிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்தவள். அவள் பெரும்புகழ் எல்லா உலகங்களிலும் பரந்து விளங்கிற்று. அவள் ஒரு சமயத்தில் தன்னுடைய நல்லொழுக்கத்தினால் தன் வீட்டுக்கு வந்து யாசித்த பிரமன் விஷ்ணு ருத்திரனென்ற மூன்று

தேவர்களையும் குழந்தைகளாக்கித் தொட்டிலிலிட்டுத் தூங்கப்பண்ணினாள். பின்பு அத்தேவர்கள் கோபங்கொண்டு அவளிருந்த நாட்டில் மழை பொழியவொட்டாமல் தடை செய்தார்கள். அந்தக் காரணத்தினால் அந்நாட்டில் பஞ்சம் பரவிப் பிடிக்கத் தொடங்கிற்று. அப்போது அநசூயை நிரபராதிகளான அந்நாட்டு மனிதர்கள் தன்பொருட்டு மழையில்லாமல் கஷ்டப்படுவதைக்கண்டு வருந்தித் தன் நல்லொழுக்கத்தின் மேன்மையினால் தானே மேகவடிவமாகி ஆகாயத்தையடைந்து ஐந்து வருஷகாலம் வரையில் மழை பொழிந்து அந்நாட்டைச் செழிக்கப்பண்ணினாள். அவள் கற்பின் மகிமையினாலேயே அத்திரிமுனிவருக்குச் சிறப்புண்டாயிற்று. ஆகையால், கற்புள்ள மனைவியினாலே ஒருவனுக்கு எல்லாவிதமான மேன்மைகளும் தாமேயுண்டாகின்றன.

> நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
> ஆறில்லா ஊருக் கழகுபாழ்— மாறில்
> உடற்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே
> மடக்கொடி யில்லா மனை.

நீறு-திருநீறு. மாறுஇல்-விரோதமில்லாத. உடன்பிறப்பு-சகோதரர். மடக்கொடி-மனைவி.

---

25. கதை:—இருபதாவது கதையைப் படித்துக் கொள்க. அக்கதையில் கோவலன் அதிகச் செலவு செய்து வந்தபடியினால் அவனுடைய எல்லாப் பொருளும் அழிந்து போயின. அவன் தன்னைப்போன்ற வியாபாரிகளைக் காண்பதற்கும் வெட்கமடைந்தான். பின்பு ஒருவர் கண்ணிலும் படாமல் இரவு நடுயாமத்தில் தன் மனைவியை யழைத்துக்கொண்டுநடந்து மதுரைப்பட்டணம் போனான்.

கடைசியில் திருட்டுக்குற்றஞ் சாட்டப்பட்டு அங்குக் கொலை யுண்டிறந்துபோனான். அவ்வளவு கஷ்டங்களுக்கும் அவன் முதலிற் செய்த அதிகச் செலவுகளே காரணமாயின. ஆதலால், வரவுக்கதிகமாக எவருஞ் செலவு செய்யலாகாது.

ஆன முதலி லதிகஞ் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனா யேழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

---

26. கதை:—பத்தொன்பதாவதிலுள்ள கதையைப் படித்துக்கொள்க. ஆதலால், பசித்துன்பம் உண்டான போது ஒருவனிடத்திலுள்ள பெருந்தன்மை முதலான பல வித நற்குணங்களும் மறைந்து போகின்றன.

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர் மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்.

வண்மை-உயர்குணம். தானம்-ஈகை. உயர்ச்சி-உயர்வு. தாளாண்மை-முயற்சி. தேனின்கசிவந்த-தேனூற்றுப்போலவந்த. சொல்லியர்-சொல்லையுடையபெண்கள். காமுறுதல்-விருப்பங்கொள்ளல். பத்து-பத்துவிதமான நற்குணங்களும்

---

27. கதை:—ஒரு காட்டில் ஆணும் பெண்ணுமாக இரண்டு புறாக்கள் வாழ்ந்துவந்தன. அவை நெடுங்காலமாக ஓராலமரத்தில் கூடுகட்டிக் குஞ்சு பொரித்துவரும். ஒரு

நாள் அந்தக் காட்டுக்கு ஒரு வேடன் வந்தான். அவனைக் கண்ட மாத்திரத்தில் எல்லாப் பறவைகளும் எச்சரிக்கையோடு பறந்துபோய்விட்டன. அவனுக்கு அன்று வேட்டையில் ஒன்றும் அகப்படவில்லை. அவன் மனம் வருந்திக் கடைசியாகப் புறாக்களிருந்த ஆலமரத்துக்கு வந்தான். மேலே அண்ணாந்து பார்க்கும்போது புறாக்கள் உட்கார்ந்திருப்பது அவன் கண்ணுக்குத் தெரிந்தது. அவன் உடனே தன் வில்லை வளைத்து ஒரு கூரிய அம்பை எடுத்துத் தொடுத்து அவைகளை எய்வதற்குக் குறிபார்த்துக்கொண்டு நின்றான். அதே சமயத்தில் அப்புறாக்களைக் கொன்று தின்னவேண்டுமென்று ஒரு பெரிய ராஜாளிப்பறவை ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. புறாக்கள் தற்செயலாக நிலத்தை நோக்கும்போது வேடன் தம்மைக் கொல்வதற்குக் குறிபார்த்துக்கொண்டு நிற்பதைக்கண்டன. உடனே பறந்து சென்று தப்பித்துக்கொள்ளலாமென்று மேலே நிமிர்ந்து நோக்கின. தம்மைப் பார்த்தவண்ணமே சமீபத்தில் வட்டமிட்டுப் பறந்து திரியும் ராஜாளிப்பறவை தெரிந்தது. தப்பித்துக்கொள்ளமுடியாத பயங்கரமான ஆபத்து தங்களுக்கு நேர்ந்திருப்பதை அப்புறாக்கள் அப்போதுதான் தெரிந்து கொண்டன. என்ன செய்யலாம்? அவைகளுக்கு ஒருபக்கமும் போகமுடியவில்லை. அவைகள் இறப்பது நிச்சயமென்று பயந்து, தங்களைக் காப்பாற்றவேண்டுமென்று கண்களை மூடிக்கொண்டு கடவுளைப் பிரார்த்தித்தன.

என்ன நடந்தது தெரியுமா? வேடன் சரியாகக் குறி பார்த்துக் கொண்டு அம்பை விடுத்தான். அப்போது மரத்தடியிலுள்ள வளையிலிருந்து வந்த கரும்பாம்பொன்று வேடன் காலைக் கடித்தது. அவன் அப்பாடாவென்று ஒரு

பக்கமாக அலறி விழுந்தான். அதனால், வில்லில் தொடுத்த அம்பு கொஞ்சம் குறி பிசகிப் புறுக்களின் பக்கமாகச் சென்று அவற்றைத் தாவிய ராஜாளிப்பறவையின் மேற் பாய்ந்து அதனைக் கொன்று விட்டது. வேடனும் ராஜாளியும் புறுக்களைப் எண்ணிய எண்ணங்களை முற்றிலும் மாறி வேறொன்றாய் முடிந்து விட்டன. ஆகலால், கடவுள் செயலின்படி காரியம் நடக்குமேயல்லாமல் நாம் நினைத்த வண்ணம் நடக்கமாட்டாது.

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்.

ஒழிந்திட்டு-போய். ஒன்றாகும்-வேறொருகாரியமாகும். எய்தும்—அடையும். செயல்-காரியம்.

---

28. கதை:-முற்பட்ட கதையைப் படித்துக்கொள்க.

உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையுஞ் சஞ்சலமே தான்.

கண்-ஞானக்கண். புதைந்த-மூடப்பட்ட. மாந்தர்-மனிதர். மண்ணின்கலம்-மண்ணாற்செய்த பாத்திரம். சாந்தனையும்-இறக்குமளவும். சஞ்சலம்-மனக்கவலை.

---

9. கதை:—முன்னொருகாலத்தில் கோசல நாட்டின் தலைநகரான அயோத்தியென்னும் பட்டணத்தில் அரிச்-

சந்திரனென்று ஓரரசன் இருந்தான். அவன் உலகத்துக்குச் சக்ரவர்த்தி. அவன் மனைவியின் பெயர் சந்திரமதி. அரிச்சந்திரன் உண்மையுரைப்பவன். தருமத்துக்கு வேலி போன்றவன். தயைக்குப் பொக்கிஷம் போன்றவன். ஏழைகளுக்கு நிதி போன்றவன். அவன் யாசகர்கள் எதைக் கேட்டாலும் இல்லையென்னாமல் அன்புடன் அளித்துவந்தான். 'இப்போது கேட்கலாம்; இப்போது கேட்கக்கூடாது' என்று வித்தியாசமில்லாமல் உலகத்தார் தாம் விரும்பியவற்றை அவ்வரசனிடத்தில் தடையில்லாமல் எப்போதும் பெற்று வந்தார்கள். ஒரு சமயத்தில் கவுசிக முனிவர் தமக்கும் வசிஷ்ட முனிவருக்கும் நேர்ந்த வருத்தம் காரணமாக அரிச்சந்திர மன்னவனுடைய அரசாட்சியை அக்கிரமமாகப் பெற்றுக்கொண்டு அவனை வனத்துக்குப் போக்கினார்.

இன்னும் அவர், அரசனும் மனைவியும் வனத்துக்குச் செல்லும்போது தாம் முன்பு எப்பொழுதோ யாசித்திருந்த பொன்னைக் கொடுத்துப்போகவேண்டுமென்றும், அதுவரையில் தமக்கு அந்த அரசன் கடனாளியென்றும், இருபது நாள் தவணைக்குள் செலுத்தவேண்டுமென்றுஞ் சொல்லியனுப்பினார். அவ்வரசன் கொடுக்கவேண்டுமென்று ஏற்பட்ட தொகை அவ்வளவு பெரியதுமன்று. அவன் அரசாட்சி முனிவருக்குச் சொந்தமான பிற்பாடு, அந்தத் தொகையைக் கொடுத்து ஈடு செய்வதற்காவது அல்லது அவனையும் அவன் மனைவியையும் ஆதரிப்பதற்காவது அந்தப் பெரும் பட்டணத்தில் ஒருவரும் முன்வரவில்லை. அவன் ஆபத்தை யறிந்து உதவி புரிவதற்கு ஒருவரும் இல்லாமற் போனார்கள். அந்தப் பெரியவரசன் கடைசியில் காசிப்பட்டணஞ் சென்று மனைவியை அடிமைப்படுத்தியும் தான் அடிமை

யாகியும் முனிவர் கடனைக் கொடுத்தான். ஆதலால், ஒரு வன் கரவாது கொடுக்குந்தனையும் உலகத்தார் அவ னுக்கு உறவினராகவே யிருப்பார்கள்.

> மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
> இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
> கற்றா தரல்போற் கரவா தளிப்பரேல்
> உற்றா ருலகத் தவர்.

இரந்து-வேண்டி. கன்று ஆ-கன்றையுடைய பசு. அமுதம்-பால். சுரந்துதரல்-சுரந்து கொடுத்தல். கரவாது-- ஒளிக்காமல். அளிப்ப ரேல்-கொடுப்பாராகுல். உற்றார்-உறவினர்.

---

[illegible] கதை:—நெடுங்காலத்துக்கு முன்பு மாண்டவியர் என்று ஒரு முனிவரிருந்தார். அவர் தமது இளம்பிராயத் தில் தும்பிகளைப் பிடித்து அவற்றின் வால்களில் முட்களைச் செருகிவிட்டு விளையாடுவது வழக்கம். அவர் விளையாட்டுப் பருவமெல்லாம் அந்த அற்ப பிராணிகளைப் பிடிப்பதும், அவற்றின் வாலில் முட்களைச் செருகிப் பறக்கவிடுவதுமா கவே கழிந்தன. அவருக்கு வயது வந்த பிற்பாடு வேதங் களை யோதினார். அநேக சாஸ்திரங்களைக்கற்றார். உயர்ந்த ஞானத்தை யடைந்தார். அப்பால் வனத்தில் ஓரிடத் தில் நின்று பலவருஷம் ஒருகாலில தவஞ் செய்துவந்தார். எவ்வளவு செய்தும் அவர் தாம் இளம்பிராயத்திற் செய்த பாவங்களைப் போக்கிக்கொள்ள முடியவில்லை. மற்றொரு சமயத்தில் அவர் அந்தப்பாவங் காரணமாய் நிர்மித்த மாயத் திருட்டுக் குற்றத்துக்குச் சொந்தமாகிக் கழுவில் ஏற் றப்பட்டார். ஆதலால், ஒருவன் தான் செய்த நல்வினை யின் பலனைச் சந்தோஷமாக அநுபவிப்பது போலவே தீ

வினையின் பலனையும் கட்டாயம் அநுபவித்துத் தீரவேண்டும்.

தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லா மொன்றாய்
வெறுத்தாலும் போமோ விதி.

தாமரையோன்—பிரமன். பொறி—எழுத்து. ஒறுத்தார்—கோபித்தவர். விதி—ஊழ்.

---

31. கதை:—a. நம தமிழ் நாட்டில் சாதாரணமான தமிழில் பலவகைப் பாட்டுப்புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன. இன்னுஞ்சில புதிதுபுதிதாக வெளிவந்துகொண்டிருக்கின்றன. அவைகள் யாவும் இலக்கணங்களின் விதியை முற்றிலுந் தழுவிச் செய்யப்படவில்லை. அச்சிறு நூல்களைச் செய்கின்றவர்கள் சங்கீத வுறுப்புகள் சரியாக அமைந்திருக்கவேண்டுமென்று கருதி ராகம்தாளம் முதலியவற்றைக் கவனிப்பார்களே யலாமல் சொற்சுவை பொருட்சுவை முதலியவற்றைக் கவனிக்கமாட்டார்கள். சொற்குற்றம் பொருட்குற்றம் முதலியவற்றைக் கவனிக்காமல் செய்யப்படுகின்ற செய்யுள்களைக் காட்டிலும சங்கீதவுறுப்புக்களை மாத்திரம் கவனித்துச் செய்யப்படும ஜாவளி, தில்லானு, டப்பா, கஜல முதலியவை உயர்ந்தனவா மென்பதற்குச் சிங்கார ஜாவளி இந்திரசபா முதலானவை உதாரணங்களாகும.

b. சில நூற்றுண்டுகளுககு முன்பு பகவன் ஆதி என்ற தம்பதிகளுக்குப பிறந்த திருவளளுவரென்றவர் வளளுவர் என்னும் ஒரு வகைத் தாழ்ந்த குலத்தாரால் வளர்க்கப்பட்

டார். அவர் கல்வியும் நல்லொழுக்கமுமுள்ளவராகிச் சென்னபட்டணத்தைச் சார்ந்த மைலாப்பூரில் தங்கி இல்லறம் நடத்தினர். அவர் தமது நல்லொழுக்கத்தினால் முனிவர்களைப்போல மூன்று காலங்களிலும் நடக்குஞ் செயல்களை நன்றாக அறிந்திருந்தார். திருவாலங்காட்டில் சிவபெருமான் காளியுடன் நடனம் பண்ணின சமயத்தில் அவர் காதில் அணிந்திருந்த குண்டலம் கீழே விழுந்துபோன தெய்வ ரகசியத்தைக்கூட அவர் அறிந்து தம்மிடத்தில் வந்து கேட்டவர்களுக்குச் சொல்லியிருக்கிறார். அவரிடத்தில் பல அந்தணர்களும் போய்த் தங்கள் சந்தேகங்களை நீங்கி வந்தார்கள். அவ்வளவு பெருமையும் அவருக்கு நல்லொழுக்கத்தினால் உண்டாயிற்றேயன்றி வேறன்று. ஆதலால், ஒருவன் உயர்குலத்திற் பிறந்திருப்பதைக்காட்டிலும் நல்லொழுக்கமுள்ளவனாக விளங்குவது மேன்மையானது.

முன்பு மச்சதேசத்தில் விராடனென்ற மன்னவனுக்கு உத்தரனென்ற ஒரு புத்திரன் இருந்தான். ஒரு சமயத்தில் பாண்டவர் ஐவரும் தங்கள் உருவங்களை மறைத்துக்கொண்டு அம்மன்னவன் வீட்டில் ஒரு வருஷகாலம் தங்கியிருந்தார்கள். அப்போது துரியோதனன் அவ்விராடமன்னவன் பசுக்களை யபகரித்துக்கொண்டு பெரும்போர் செய்யத் தொடங்கினன். அப்போர் இரண்டிடத்தில் நடந்தது. ஒன்று அவன் பட்டணத்துக்குத் தென்புறம். மற்றொன்று வடபுறம். விராடமன்னவனும் அவன் படைவீரர்களும் தென்புறத்தில் சண்டை செய்யச் சென்றிருந்தார்கள். அச்சமயத்தில் உத்தரன் நான் பகைவர்களை வென்று விடுகிறேனென்று பெருமை பேசிப் பிருகந்நளை யென்ற ஒருபேடியைத் தனக்குச் சாரதியாக அமர்த்திக்கொண்டு வடக்குத் திக்கில் சண்டை செய்யப் போனன்.

அவன் போர்க்களத்துக்குச் சென்று பகைவர்களை எதிர்க்கண்ட மாத்திரத்தில், மிகவும் பயந்து உடம்பு நடுங்கி வாயகுழறிக் கொண்டு நிலத்தில் குதித்து ஊரைப்பார்க்க வோடத் தொடங்கினான். அப்போது சாரதியாகப் போன பேடி அவனை மடக்கித் தைரியஞ் சொல்லி யழைத்து வந்து, அவனைத் தனக்குத் தேர்விடச் செய்து, தான் துரியோதனனையும் அவன் படைவீரர்களையும் எதிர்த்து யுத்தம்பண்ணி வெற்றியடைந்து அவ்வெற்றியின் சிறப்பை உத்தரனுக்கே கொடுத்துக் கௌரவப் படுத்தினான். உத்தரனுடைய வீண் பெருமையைக் காட்டிலும் அப்பேடியின் ஆண்மைத்தனம் சிறந்ததன்றோ? ஆதலால், வீண்பெருமைகொண்ட ஒருவன் எத்தனத்திலும் ஆகாதவனாக நேரிடுவது.

d. தசரதசக்ரவர்த்திக்குக் கைகேயி யென்று ஒரு மனைவி யிருந்தாள். அவள் சக்ரவர்த்தியினிடத்தில் எப்பொழுதோ பெற்றுக்கொண்டிருந்த இரண்டு வரங்களையும் அவர் மூத்த புத்திரனான இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிச்சயித்திருந்த சமயத்தில் இராமனைப் பதினாலு வருஷம் வரையில் வனத்துக் கனுப்பவேண்டுமென்றும், அதுவரையில் தன் மகன் பரதனை அயோத்திக்கு அரசனாக்கவேண்டுமென்றும் கேட்டாள். தசரதர் 'இராமன் என் உயிர். அவன் வனம்போகவேண்டாம். அவன் காட்டுக்குச் சென்றுவிட்டால், நான் இறந்து போவேன். நீ வேறுவிதமான வரத்தைக் கேள். தருகிறேன்' என்று பலவிதமாகவுஞ் சொன்னார். கைகேயி தன்வரங்களால் தனக்கும் தன் கணவருக்கும் நேரிடுகின்ற உலகப் பழிப்பைக் கொஞ்சமும் ஆராய்ந்து பாராமல் 'சக்ரவர்த்தியைப் பொய்யனென்றும், வஞ்சகனென்றும் தூஷித்து, எப்படியும் தன் வரத்தைக் கொடுத்தே தீரவேண்டுமென்று பிடி

வாதம் பண்ணினாள். பின்பு தசரதர் விதியில்லாமல் அவளை விரும்பிய அவ்விரண்டு வரங்களையும் கொடுத்து அப்போதே மரணமடைந்தார். பழிக்குப் பயப்படாத அக்கைகேயியை அவர் மனைவியாகக் கொண்டிருக்கவில்லையானால் மரணத்துக்கு உள்ளாயிருக்கமாட்டாரன்றோ?

இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சால
ஒழுக்க முயர்குலத்தி னன்று—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி.

இழுக்கு-இலக்கணக்குற்றம். இசை-சங்கீதப்பாட்டு. சால-மிகவும். ஒழுக்கம்-நன்னடத்தை. வழுக்கு-தவறுதல். விடாநோய்-தீராதநோய். பழிக்கு-குலத்துக்குவரும் பழிக்கு. தாரம்-மனைவி. தனி-தனியேயிருத்தல்.

---

32. மூன்றாவது கதையைப் படித்துக்கொள்க.

ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறு முயர்ந்து.

ஆம் செல்வம்-ஒருவருக்கு இருப்பதாகிய செல்வம். ஆறு இடும்-ஆற்றிலுண்டாகும். மாறிடும்-மாறிப்போகும். ஏறிடும்-உயர்வடையும். சார்பு-துணை. உள்நீர்மை-உள்ளத்தின்றன்மை. வீறும்-உயர்வடையும்.

---

33. கதை:—முற்காலத்தில் இராமன் தன் பராக்கிரமத்தினால் ஜனக மன்னவன் புத்திரியான சீதையை மணந்து ஆடம்பரமாக அயோத்திக்கு வந்து கொண்டிருந்தான்.

அப்போது பரசுராமரென்ற ஓரந்தண முனிவர் கோபத்தோடு அவனை எதிரிற் கண்டு 'இராமா! நீ மிதிலைப் பட்டணத்தில் சீதையின் பொருட்டு ஒடித்த பெரிய வில் பயனற்றது. அது பல வருஷங்களாகப் பூஜையிலிருந்து வந்தபடியினாலே அபிஷேக நீர் பட்டுப்பட்டு வைரஞ் செத்துப் போயிற்று. அந்தவில்லை வளைத்தொடித்துவிட்டது உனக்குப் பெருமையாகமாட்டாது. இதோ நான் கரத்தில் வைத்திருக்கும் உயர்ந்த வில்லைப்பார்! இது ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்குச் சொந்தமானது. பராக்கிரமத்தினாலே நான் கைப்பற்றியிருக்கிறேன். இஃது உன் போன்ற ஆயிரக்கணக்கான அரசர்களைக் கொன்று வெற்றிபெற்றது. உருண்டை வில்லையும் வளைத்து அடிக்கத் தெரியாத நீ இவ்வில்லைச் சரியானபடி தூக்கிநிறுத்தவுஞ் சக்தியுள்ளவனாகாய். இஃது உன்னுடைய வீண்பெருமையை அடியோடகற்றிவிடும். உனக்குச் சக்தியிருந்தால், இவ்வில்லைச் சரியானபடி வளைத்து நாணேற்று' என்று தம்முடைய பெரியவில்லைக் கொடுத்தார்.

இராமன் 'முனிவரே! தங்கள் கட்டளையை நான் எவ்வாறு மறுக்கமுடியும்? தாங்கள் எவற்றிலும் உயர்ந்தவர். என்னவோ முடியுந்தனையும் முயன்று பார்க்கிறேன்' என்று சொல்லிப் பெற்றுக்கொண்டு ஒரே நிமிஷத்தில் வளைத்துப் பாணத்தைப் பூட்டிப் 'பூஜ்யரே! இந்தப் பாணத்துக்குக் குறியைக்காட்டுங்கள். யார்மீது செலுத்தக்கட்டளையிடுகிறீர்கள்?' என்று கேட்டான். பரசுராமர் திடுக்கிட்டுப் பயந்து ஒன்றுந் தோன்றாமல் வாய் குழறிக்கொண்டு 'இராமா! நீ சூரன். உன் பராக்கிரமத்துக்கு ஒருவரும் ஒப்பாகமாட்டார்கள். நான் அந்தணன். என்னை மன்னித்துக்கொள். இதுவரையில் நான் செய்திருக்கும் தவங்களை உன் பாணத்துக்குத் தத்தஞ் செய்து விடுகிறேன். நீ உன் இன் சொல்லினாலேயே

என்னை முழுவதும் வெற்றி கொண்டு விட்டாய். நான் கோபத்தினாலும் பொறாமையினாலும் கொடுஞ் சொல்லைச் சொல்லித் தோல்வியையும் அவமானத்தையு மடைந்தேன். இவ்வுயர்ந்த வில்லையும் என் தவத்தையும் பெற்றுக்கொண்டு என்னை விடுதலை செய்து விடு! நான் தவத்துக்குப் போகிறேன்' என்று சொல்லி அவ்விரண்டையுங் கொடுத்துக் காட்டில் மறைந்துபோய்விட்டார். இதனால், கொடுஞ் சொற்களைக் காட்டிலும் இன்சொல் எளிதில் வெற்றி பெறுமென்பது வெளியாகின்றது.

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவுங் கோல் பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

வெட்டெனவை-கடுமையான சொற்கள். மெத்தெனவை-சாந்தமான சொற்கள். வெல்லா-ஜயிக்கா. வேழம்-யானை. பட்டு-பாய்ந்து. கோல்-அம்பு. இருப்புப்பாரை-இரும்பினாற் செய்த கடப்பாறை. நெக்குவிடு-பிளந்து போகும்.

---

34. கதை.—ஆதிகாலத்திலே பாண்டவரைவரும் அவர்கள் மனைவி பாஞ்சாலியும் மச்சதேசத் தரசனான விராட மன்னவன் வீட்டில் தமமுருவங்களை மறைத்துக்கொண்டு ஒரு வருஷகாலம் வாசஞ்செய்துவந்தார்கள். அப்போது துரியோதனன் விராடமன்னவனுக்குச் சொந்தமான பசுக்கூட்டங்களை அபகரித்துத் தனக்குச் சொந்தமாக்கிக்கொண்டு போனான். அதன் காரணமாக விராடன் கடைசிப் பிள்ளையான உத்தரன் பிருகந்நளை யென்ற பேடியைத் தனக்குத் தேர்விடச் செய்துக்கொண்டு துரியோதனனோடு சண்டை செய்யப்

புறப்பட்டுப் போனான். முதல் நாளில் வேறொரு பகைவனை எதிர்த்துப் போர்செய்து வெற்றியோடு திரும்பிக் கங்கபட்டனென்ற சந்நியாசியோடு சூதாடிக் கொண்டிருந்த அரசன்பால் தூதர்கள் வந்து வணங்கி, உத்தரகுமாரன் துரியோதனன் முதலானவர்களை வெற்றிகொண்டு பசுக்களைத் திருப்பிவருகிறானென்று சொன்னார்கள்.

விராடன் சந்தோஷித்து அவனை ஆடம்பரத்தோடு அழைத்து வரும்படி மந்திரி முதலானவர்களுக்குக் கட்டளையிட்டுக் 'கங்கபட்டரே! என் மகன் பகைவர்களை வென்றது போல சூதாட்டத்தில் நான் தங்களை வெற்றிகொள்கிறேன்' என்று சொன்னான். சந்நியாசி 'அரசனே! அவசரப்படவேண்டாம். பீஷ்மர் முதலான பெரியவர்களை எதிர்த்துச் சண்டை செய்வது எளிதான காரியமன்று. அவர்கள் பலத்திலும் பராக்கிரமத்திலும் [illegible] ஒப்பற்ற வீரர்கள். உன்போன்ற அரசர்களாலும் அவர்களை அபஜயப்படுத்துவது அசாத்தியமான காரியம். டை வில்லையும் சரியாய்ப் பிடிக்கத் தெரியாத அறியாச் சிறுவனாகிய உன் பிள்ளை உத்தரகுமாரன் அவர்களை ஒரு நாளும் வெற்றிகொண்டிருக்கவே மாட்டான். ஆனால், இவ்வெற்றி அவனுக்குத் தேர் விடுவதற்கு ஒப்புக்கொண்டு சென்ற பிருகந்நளை யென்ற பேடியினால் கிடைத்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்' என்று சொன்னார்.

விராட மன்னவனும் அவனைச் சார்ந்தவர்களும் அவ்வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. அவர் 'பிச்சை யெடுத்துப் பிழைக்கும் சந்நியாசி யென்றும், அவருக்கு இராஜவம்சத்தாரின் பராக்கிரமங்களை அறிந்து சொல்லத் தெரியாதென்றும், அதனுடன் அகங்காரங் கொண்டவரென்றும், அரசகுமாரன் வெற்றியில் அசூயையுள்ளவரென்றும்' பலவாறு

தூஷித்து அவமானமுண்டாக்கினார்கள். அரசன் அவற்றோடும் நில்லாமல் பாய்ச்சிகைக் காயினால் அவர் நெற்றியில் அடித்துக் காயப்படுத்தினான். சந்நியாசியின் வசனம் உண்மையாயிருந்துங்கூட அவர் எளிய வேஷத்தினால் அவருக்கும் அவர் வாக்கைக்கும் சபையில் மதிப்புண்டாகவில்லை. விராடமன்னனுடைய மூடவார்த்தைக்கு மதிப்பு உண்டாயிற்று. ஆகலால், பொருளில்லாத தரித்திரனுக்கு உலகத்தில் மதிப்புண்டாகமாட்டாது.

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாயும்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

இல்லானை—பொருளில்லாதவனை. இல்லாள்—மனைவி. செல்லாது—செல்லமாட்டாது.

---

35. கதை:—ரு. முற்காலத்தில் கைகேயி யென்பவளுக்குத் தசரதசக்ரவர்த்தி நெடுநாட்களுக்குமுன்பு இரண்டுவரம் கொடுத்திருந்தாரென்று, அவள் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிச்சயித்திருந்த சமயத்தில் அவ்வரங்களால் இராமனைப் பதினான்கு வருஷம் வனத்துக்கு அனுப்பவேண்டுமென்று நிர்ப்பந்தப் படுத்தினளென்றும் படித்திருக்கிறார்கள். தருமத்துக்குப் பயந்த அந்தச் சக்ரவர்த்தி வேறுவழியில்லாமல் அவள் விரும்பிய வரத்தை நிறைவேற்றுவதற்கு ஒப்புக்கொண்டார். பிற்பாடு, இராமன் கைகேயியினால் தந்தையின் கட்டளையைத் தெரிந்துகொண்டு மனைவி சீதையோடும் தம்பி இலக்ஷ்மணனோடும் அப்பொழுதே புறப்பட்டுத் தண்டகாரணியம் போனான். தந்தை 'நீ வனஞ் சென்றுவா!' என்று அவனுக்கு நேராகக் கட்டளை கொடுக்கவேயில்லை.

ஆதலால், இராமனைப்போல ஏவப்படாமலே குறிப்பறிந்து நடக்கின்ற அறிவுள்ளவர்களும் உலகத்தில் இருந்து வருகிறார்கள்.

7. ஒருநாள் ஒரு மாப்பிள்ளை தனது நண்பனொருவனை யழைத்துக்கொண்டு மாமியார் வீட்டுக்குச் சென்றான். அவனுக்குக் கடுக்கனில்லை. அதனை மாத்திரம் மற்றொருவனிடத்தில் இரவல் வாங்கிக்கொண்டு போனான். மருமகன் வருகையைக் கண்டமாத்திரத்தில் மாமியார் ஒருபெரிய பட்டுப் பாயைக் கொண்டுவந்து நலைக்கடைத்திண்ணையில் விரித்து 'உட்காருங்கள்!' என்று சொன்னாள். இருவரும் பாயிலுட்கார்ந்து காப்பி முதலான சிற்றுண்டிகளை யுண்டு இளைப்பாறி யிருந்தார்கள். அப்போது மாமனார் வந்து க்ஷேமம் விசாரித்தார். தோழன் 'ஐயா! க்ஷேமம். தங்கள் மாப்பிள்ளை கடுக்கன் மாத்திரம் இரவல் வாங்கினார். மற்றவை யாவும் அவருக்குச் சொந்தமானது தான்' என்று சொன்னான். மாப்பிள்ளை அவனைக் கோபித்துக்கொண்டு 'உன்னை யார் கடுக்கனைக் கேட்டார்கள். நீ பேசாமல் இருக்கலாகாதா' வென்று கூறினான். அவன் 'இனி எச்சரிக்கையோடு நடந்து கொள்கிறேன்' என்றான்.

சற்றுநேரம் கழித்து மைத்துனன் வந்து க்ஷேமம் விசாரித்தான். அப்போது தோழன் 'ஐயா! எல்லாரும் க்ஷேமம். ஆனால், கடுக்கனைப்பற்றிமாத்திரம் என்னைக் கேட்கவேண்டாம்' என்றான். மைத்துனன் அதனைக் கேட்டுச் சிரித்துக்கொண்டு போனான். அப்புறம் மருமகன் தோழனை யதட்டிப் 'புத்தியற்றவனே! உன்னை கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இனியேனும் அசட்டுத்தனமாக ஒன்றுஞ் சொல்லாதிரு. உன்னால் எனக்கு மானம் போகின்றது' என்றான். தோழன் 'நீ வருத்தப்படாதே. எனக்கு அவ்வளவு புத்தி

யில்லாமற் போகவில்லை. இனி நான் சொல்வதென்னப்பா?' என்று தேற்றினான். பிற்பாடு, மாமனாருக்கு மிகவும் நெருங்கின நண்பர் ஒருவர் வந்து மருமகனைக் கண்டு க்ஷேமம் விசாரித்தார். அப்போது நண்பன் அதிக அவசரத்தோடு 'ஐயா! உங்கள் அனுக்கிரகத்தினால் க்ஷேமமாகவே யிருக்கிறேன். மருமகன் சிக்கனைப்பற்றித் தாங்கள் சந்தேகங் கொள்ளவேண்டாம். அவர் இரவல் வாங்கி யாரவில்லை. அஃது அவருக்குச் சொந்தமானதுதான்' என்று சொன்னான். மருமகன் அவமானத்தினால் உடம்பு குன்றி மூளை யழிந்து வருத்தப்பட்டுத் தனக்கு அவசரமான வேலையுளதென்று மறுநாள் அதிகாலையிலேயே ஊருக்குத் திரும்பிவிட்டான். ஆதலால், மூடர்களுக்கு எத்தனைதடவை புத்தி சொன்னாலும் அவர்கள் ஒருபோதும் திருந்த மாட்டார்கள்.

> பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
> ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே — தூவா
> விரைத்தாலு நன்றாகா வித்தெனவே பேதைக்
> குரைத்தாலுந் தோன்றா துணர்வு.

பூவாதே-மலருண்டாகாமலேயே. ஏவாதே-(ஒருவர்) ஏவாமலே. நின்று-இருந்து. உணர்வார்-அறிந்து கொள்கின்றவர்கள். தூவா-தூவி. நாறாத-முளையாத. பேதை-அறிவில்லாதவன். உணர்வு-அறிவு.

---

36. கதை :—விசிரவசுவின் குமாரனான இராவணன் பிரமதேவனைக் குறித்து நெடுங்காலம் வரையில் தவஞ்செய்து உயர்ந்த வரங்களையும் சிறந்த அரசாட்சியையுமடைந்தான். தேவர்களும் தெய்வப்பெண்களும் அவனுக்குக் குற்றேவல் புரிந்து அடங்கிவந்தார்கள். நெடுநாள

கழித்து அவன் சகோதரி சூர்ப்பணகையென்பவள் சீதையின் உயர்ந்த அழகையும், அவள் தன் கணவனோடு தண்டகாரணியத்தில் வாசம் பண்ணுவதையும் அவனுக்கு விளங்கக் கூறினாள். அவனுக்கு அப்போதே சீதையைச் சொந்தமாக்கிக் கொள்ளவேண்டுமென்று ஒருகெட்ட எண்ணம் உண்டாயிற்று. உடனே அவன் தன் நண்பன் மாரீசனிடத்துக்குச் சென்று தன் கருத்தைத் தெரிவித்து அவனைப் பொன்மானாகப் போக்கி இராம லக்ஷ்மணர் இருவரையும் சீதையை விட்டுப் பிரிந்து போகப்பண்ணினான். பிற்பாடு பர்ணசாலையில் தனித்திருந்த சீதையைச் சந்நியாசி வேஷத்தோடு கண்டு தன்னையும் தன் கருத்தையும் அவளுக்குத் தெரியப்படுத்தினான். ஜானகி முகங்கொடுத்துப் பேசாமல் கோபித்துக்கொண்டதனால் இராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு அப்போதே இலங்கைப்பட்டணஞ் சென்று அசோகவனமென்ற விடத்திற் சிறைவைத்துத் தன்னெண்ணத்தை நிறைவேற்ற வேண்டுமென்று பயத்திலும் யுக்தியிலும் பலவிதமாக நிர்ப்பந்தப் படுத்தி வந்தான். சீதை அவனையும், அவன் விருப்பத்தையும், அவன் கட்டளைகளையும் அலக்ஷியம் பண்ணிவிட்டுத் தைரியத்தோடிருந்து தன் உயர்ந்த கற்பைச் சரியாகக் காப்பாற்றிக்கொண்டிருந்தாள்.

பிற்பாடு, இராம லக்ஷ்மணர்கள் இறக்குந் தருணத்திலிருந்த ஜடாயு வென்ற கழுகினால் இராவணன் மோசத்தையறிந்து அநுமான் முதலான வாநர படைகளைத் திரட்டிக்கொண்டு சென்று அவன் பட்டணத்தை முற்றுகையிட்டார்கள். இராவணன் முதலில் தன் படை வீரர்களையும் பந்துக்களையும் புத்திரர்களையு மனுப்பி அச்சகோதரர்களைக் கட்டிக்கொண்டு வரக் கட்டளையிட்

டான். அத்தனை பெயரும் அவர்கள் அஸ்திரங்களினுல் ஒருமிக்க மாண்டு போனுர்கள். பிற்பாடு, இராவணன் யுத்த களத்துக்கு வந்து இராமனேடு சண்டை செய்து தன் வரத்தையும் பலத்தையும் உயிரையும் இழந்தும்பானுன். அவன் முதலில் சீதையை விரும்பி யெடுத்து வராதிருந்தால், இராமனுல இறந்திருக்கமாட்டானன்றோ ? ஆதலால், எவ்வளவு உயர்ந்தவர்களாஞலும் அயலான் மனைவியின் மீது ஆசை கொள்ளலாகாது.

நண்டுசிப்பி வேய் கதலி நாசமுறுங் காலத்தில
கொண்ட கருவழிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீஇ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலத்தே
மாதர்மேல் வைப்பார் மனம்.

சிப்பி-முத்துச்சிப்பி. வேய்-மூங்கில. கதலி-வாழை. கரு-கர்ப்பம். கொள்கைபோல் தன்மைபோல. போதம்-அறிவு. பொன்ற-அழிய. மாதர் மேல்-அயலார் மனைவிமேல். ஒள்தொடீஇ- ஒளிபொருந்திய வளையலணிந்தவளே.

---

37. கதை:—முற்காலத்தில தசரத சக்ரவர்த்திக்கு ஸ்ரீ மகாவிஷ்ணு இராமனென்னும புத்திரனுய்த் தோன்றினர். எல்லாக் குணங்களும் அவனுக்குச் சொந்தமாக விருந்தன. அப்படிப்பட்ட புத்திரனுக்கு மகுடாபிஷேகஞ் செய்யும்படி சக்ரவர்த்தி முகூர்த்தம் நியமித்தார அயோத்தி முழுவதும் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. பட்டணத்திலுள்ளவர்கள் புதியவரசன் பட்டத்து யானையின் மீது பவனி வருவதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார் கள். வேதமந்திரங்களின் ஒலியும வாத்திய கீதங்களின்

ஒலியும் ஒன்று சேர்ந்து பரவின. மெல்ல மெல்ல முகூர்த்த காலமும் நெருங்கி வந்தது. அப்போது இராமன், எவரும் எப்போதும் எதிர்பாராதவிதமாக மரவுரியாடையும், சடைமுடி வேடமும் பூண்டு தெருவில் நடந்துவந்தான். அவன் மனைவி சீதை தவப்பெண்களைப் போலத் தாழ்ந்த வேஷந் தரித்துக் கணவனைப் பின் றொடர்ந்தாள். இலக்ஷ்மணனென்ற சகோதரனும் தவக்கோலத்தோடு தமையனைப் பின் பற்றினன்.

அவன் மகுடாபிஷேக முகூர்த்தமானது அப்போதே வனவாச முகூர்த்தமாக மாறிப்போயிற்று. அவன் விதி அவ்வளவோடும் அடங்கவில்லை. அவன் வனத்தில் வாசஞ் செய்கையில் இலங்கைத் தீவுக் கரசனாகிய இராவணனென்பவன் அவன் அருமை மனைவி சீதையைச் சிறைபெடுத்துக் கொண்டு போய்விட்டான். அந்தக் கொடிய வனத்தில் இராமன் தன்னை ஆற்றுவாரில்லாமல் அவமானத்தினால் வருந்தித் தனக்கு உதவி செய்வதற்குத் தன் போன்ற மனிதவாகத்தில் ஒருவருங் கிடைக்கப் பெறாமல் குரங்குகளோடு பழகிச் சீதை யிருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்கு அவைகளை வேண்டித் தூதனுப்பினன். பிற்பாடு அவைகளின் உதவியினாலேயே அவ்வரக்கனைக்கொன்று இழந்த மனைவியைப் பெற்றான். அவனடைந்த கஷ்டங்களைச்சொல்லிமுடியாது. ஆதலால், எப்படிப்பட்டவர்களாலும் ஊழ்வினையைக் கடக்க முடியாது. அநுபவித்தே தீரவேண்டும்.

வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலாம்
அனைத்தாய நூலகத்து மில்லை—நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லாற் கவலையுறேல் நெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி.

**வினை**-ஊழ்வினை. எனைத்து ஆய-எல்லாவிதமான. நினைப்பு-முற்பிறப்பின் நினைவு. அது என-அவ்வினைப்பயனுக்கு அமைந்ததென்று. கண் உறுவதல்லால்—கண்டு சொல்வதல்லாமல். மெய்-உண்மையான விண்-முத்தியுலகம். உறுவார்க்கு-அடைய விரும்புவோருக்கு.

---

38. கதை:—முன்னொரு காலத்தில் ரகூகணன் என்ற மன்னவன் கபிலமுனிவரிடத்தில் ஞானோபதேசமடையும்பொருட்டுச் சிவிகையி லேறிக்கொண்டு அம்முனிவர் ஆசிரமத்துக்குப் போனான். பல்லக்குப் போயின நடுவழியில் உன்மத்தனைப் போலத் திரிந்துகொண்டிருந்த ஜடபரதனென்ற ஞானியைப் பிடித்துப் பல்லக்கைச் சுமந்து போகச் செய்தார்கள். அந்த ஞானி மாறு மாறாக அடிவைத்து நடந்ததனால் அரசனுக்கு உடம்பு குலுங்கி வருத்தமுண்டாயிற்று. அவன் உடனே சிவிகையை நிறுத்தச்சொல்லி ஞானியைத் தெரிந்துகொண்டு அவர் காலில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். ஜடபரதர் 'அரசனே! நீ குற்றஞ் செய்யவில்லை. எனக்குத் தோஷமும் வருத்தமும் கிடையாது' என்று சொல்லி, அரசனுக்கு அவன் விரும்பிய வண்ணம் ஞானோபதேசமும் பண்ணிப் போனார். ஆதலால், உண்மை ஞானிகளுக்கு உடல் சம்பந்தமான இன்பதுன்பங்களும் விருப்பு வெறுப்புக்களும் உண்டாவதில்லை.

> நன்றென்றுந் தீதென்றும் நானென்றுந் தானென்றும்
> அன்றென்று மாமென்று மாகாதே—நின்றநிலை
> தானதாந் தத்துவமாஞ் சம்புவாற் றார்யாக்கைக்குப்
> போனவா தேடும் பொருள்.

சம்பு-சம்பாபுல்லை. யாக்கைக்கு அந்தப்புல்லைக் கட்டுவதற்கு. போன ஆறு-வேறு இல்லாமைபோல நின்றநிலை-கடவுளருளைப் பெற நின்றநிலை. தான்-அவன். அது ஆம்-பதியாகும். தத்துவம்-உண்மை போனவாறு என்பது ஈறுகெட்டுநின்றது.

39. கதை:—ஆதிகாலில் சந்தனு என்று ஒரு மன்னனிருந்தார். அவருக்கு முதல் மனைவியான கங்காதேவி

யின் வயிற்றில் காங்கேயன் என்று ஒரு புத்திரர் பிறந்தார். அவர் தம்முடைய இளம்பிராயத்திலேயே தாயாரின் நன் முயற்சியினால் எல்லாக் கலைகளையும் நன்றாகக் கற்று ஒவ்வொன்றிலும் பண்டிதராக விளங்கினார். அவருக்கு வசிஷ்ட முனிவர் வேதங்களை யோதுவித்தார். தெய்வ குருவான பிருகஸ்பதி சாஸ்திரங்களைக் கற்பித்தார். அசுர குருவாகிய சுக்கிர பகவான் மந்திரங்களை யுபதேசித்தார். ஜமதக்கினி முனிவர் புத்திரரான பரசுராமர், வில்வித்தையைப் பயிற்றுவித்தார். அவர் உலகத்திலிருந்த எல்லாப் பண்டிதர்களையும் பாலியத்திலேயே மிஞ்சி விளங்கினார். அவர் ஒழுக்கத்துக்கும் கல்விக்கும் வெகுமதியாகச் சந்தனு மன்னவர் 'குழந்தாய்! நீ உலகத்தில் சாதாரணமான மனிதர்களைப் போல இறக்க வேண்டியதில்லை. நீ உலகத்திலிருக்கும் வரையில் யமன் தன்னுடைய கொடிய பாசத்தை உன் மேல் வீசாதிருப்பானாக. நீ விரும்புகின்ற சமயத்தில் உனக்கு மரணமுண்டாகுக' என்று உயர்ந்த வரத்தைக் கொடுத்தார். அவர் அவ்வரத்தின் மகிமையினால் நெடுங்காலம் வரையில் உலகத்திலிருந்து புகழோடு விளங்கினார். பின்பு பாரத யுத்தத்தில் துரியோதனன் பொருட்டுப் பத்து நாள் வரையில் பாண்டவர்களோடு சண்டை செய்து அர்ச்சுனன் அஸ்திரங்களால் தமது உடம்பு சல்லடைக் கண்களாகத் தொளைக்கப்பட்டுப் படுகாயமடைந்துங்கூட அவர் மரணமடையவில்லை. அர்ச்சுனனால் அமைத்துக்கொடுக்கப்பட்ட அஸ்திரப் படுக்கையில் அப்படியே யிருந்துகொண்டு, யுதிஷ்டிர சக்கரவர்த்திக்கு அவர் விரும்பின தருமோபதேசங்களைச் செய்து, சூரியன் உத்தராயணத்தில் பிரவேசித்த பிற்பாடு கிடைத்தற் கருமையான மோக்ஷவுலகத்தை யடைந்தார். ஆதலால், பீஷ்மரைப்போல ஒவ்வொருவரும் முப்பதாவது வயதிற்குள் உயர்ந்த ஞானத்தை யடைந்து நல்லொழுக்கமுள்ளவர்களாகப் பழகவேண்டும்.

முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறானாயின்—செப்பும

கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள்
நிலையளவே யாகு நலம்.

மூன்று-காமம், வெகுளி, மயக்கம் என்ற குற்றங்கள். அற்று-நீங்கப்பெற்று. ஒரு பொருளை-கடவுளையடையும் ஞானத்தை. தப்பாமல்-தவறாமல். தன்னுள்-தன்மனத்தில். பெறான் ஆயின்-பெறுவிடின். செப்பும்-சொல்லப்படும். கலை அளவு ஆகும்-அநுபவமில்லாமற் படித்த நூல்களின் அளவேயாகும். காரிகை-பெண்கள். நிலை-ஒழுக்கம். நலம்-அழகு.

---

40. கதை இல்லை.

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியும்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

தேவர்-திருவள்ளுவதேவர். குறள்-திருக்குறள். நால்மறை முடிவு-நான்கு வேதங்களின் முடிவான வேதாந்தம். மூவர்-அப்பர் சுந்தரர், சம்பந்தர் என்னும் மூவர். தமிழும்-தமிழ் வேதமான தேவாரமும். முனிமொழியும்-வியாசமுனிவர் செய்த வேதாந்த சூத்திரமும். கோவை-திருக்கோவையார். திருமூலர்-திருமூல நாயனார். சொல்லும்-திருமந்திரமும். ஒருவாசகம்--ஒரு பொருளைக் குறிக்கும் சொல்.

நல்வழியும் கதைக் குறிப்பும் முற்றுப்பெற்றன.

---

Printed by S. Murthy & Co., at the "Kapalee Press," Madras.

